# சமாதானத்திற்கு என்றுமே தயார்

## ஐசனோவருக்கு சோவியத் பதில்

விலை 3 அணா Phone: 85777

ஜனசக்தி

(கம்யூனிஸ்ட் கட்சி வார இதழ்)

மலர் 9] ஞாயிறு 10—5—53 [இதழ் 22

இரண்டாம் உலக யுத்தத்தில் ஹிட்லர் பாசிஸத்தை எதிர்த்து சோவியத் யூனியன், அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் முதலிய நான்கு நேச நாடுகளும் போரிட்டு வெற்றியடைந்து எட்டு வருடங்களுக்கு மேலாகிவிட்டன. தங்கள் தாய்நாட்டின் சுதந்திரத்தைக் காப்பாற்றவும், பாசிஸ்ட் நுகத்தடியின் கீழ் அடிமைப்பட்டுக் கிடந்த ஐரோப்பிய மக்களை விடுதலை செய்யவும், யுத்தத்திற்குப் பின்னர் நிரந்தர சமாதானத்தையும், சர்வதேச பந்தோபஸ்தையும் உறுதிப்படுத்தவும் நேசநாடுகள் போரிட்டன.

யுத்தத்திற்குப் பின்னர் சோவியத் யூனியன் சமாதானத்திற்காகவும், வெவ்வேறு நாடுகளுக்கிடையே பரஸ்பர ஒத்துழைப்புக்காகவும் பாடுபட்டு வந்துள்ளது. 1953, மார்ச் 9ம் தேதியன்று தோழர்கள் மெலங்கோவ், பெரியா, மொலட்டோவ் முதலியோர் சோவியத் யூனியனின் சமாதான ஆர்வத்தை மீண்டும் தெளிவாக எடுத்துக் [கூ]றினர்.

[ஏ]ப்ரல் 16ம் தேதியன்று அமெரிக்க ஜனாதிபதி ஐசனோவர் சோவியத் சமாதான [ஆ]லோசனைகளுக்கு பதில் [கூ]றும் முறையில் அமெரிக்க வெளிநாட்டுக் கொள்கையை [வி]ளக்கிக் கூறினார். "ஆசியா[வி]லும், உலகம் பூராவிலும் [உ]ண்மையான, பரிபூரணமான [ச]மாதானத்தை நாங்கள் விரும்புகிறோம்" என்று அவர் கூறினார்.

எல்லா தேசங்களின் உரிமைகளும் மதித்து நடக்கப்பட்டால் தீர்க்க முடியாத பிரச்னை ஒன்றுமேயில்லையென்று அவர் அறிவித்தார்.

ஜனாதிபதி ஐசனோவரின் இந்த சமாதான அறிவிப்புகளும், அவருடைய பிரசங்கத்தில் கண்டுள்ள இதர அம்சங்களும் முன்னுக்குப் பின் முரணாகவுள்ளன.

### பயமுறுத்தல் பலிக்காது

சமாதானம் பற்றிப் பேசிய [ஐ]சனோவர் அதே மூச்சில் [அ]ணு குண்டு யுத்தம்' பற்றி[யு]ம் குறிப்பிட்டார். ஜனாதிபதி[யி]ன் சமாதான அபிலாஷை[க]ள இத்தகைய பேச்சு நிச்சயம் பலப்படுத்தவில்லை. சோவியத் யூனியனைப் பொறுத்தவரையில் இத்தகைய பேச்சின்மூலம், பட்டவர்த்தனமாகக் கூறவேண்டுமெனில், இத்தகைய பயமுறுத்தலின் மூலம் அது எந்த நோக்கத்தையும் சாதித்ததில்லை, சாதிக்கவும் முடியாது.

ஜனாதிபதி தன்னுடைய பிரசங்கத்தில் பல முக்கியமான சர்வதேசப் பிரச்னைகளைப்பற்றிக் குறிப்பிட்டார். ஆனால் இறுதியாக சோவியத் யூனியன்—அமெரிக்க உறவுகள் பற்றிய பிரச்னைகளை பிரதானமாக ஆராய்ந்தார். உண்மை விருப்பத்தை நடைமுறை மூலமாகத்தான் அறிய முடியும் என்று குறிப்பிட்டார்.

அது முக்காலும் உண்மைதான். வார்த்தைகளைக் காட்டிலும் செய்கைகள்தான் மிகவும் முக்கியமானது என்பதை யாராலும் மறுக்க முடியாது. எனவே, சமாதானத்தைப் பாதிக்கக்கூடிய முக்கியமான சர்வதேசப் பிரச்னைகளை நாம் சற்று ஆராயலாம்.

### கொரியா - ஜெர்மன் பிரச்னைகள்

கடந்த ஒரு சில வருடங்களாக கொரிய யுத்தப் பிரச்னை மீதும், கொரியாவை ஐக்கியப்படுத்தும் பிரச்னைமீதும் உலக நாடுகளின் கவனம் பூராவும் திரும்பியுள்ளது என்பதை யாராலும் மறுக்கமுடியாது. [இ]தைப்போன்ற பிரச்னைகள் பாதும். ஒவ்வொரு நாட்டின் [இ]ருந்த[நா]ட்டுக் கொள்கைக்கும் தோழர் ஒரு சில வருடங்களாக சரியான[படி] போல் இருந்துவந்[த]டவில்லை.

[கொரி]யாவில் யுத்த [நி]றுத்தம் ஏற்பட சோவியத் மக்கள் [...] ஆதரவு அளித்து வந்தனர். கொரிய சமாதானம் பற்றிப் பேசப்படும் வார்த்தைகளை செயல்முறையில் மாற்றுவதற்கு சந்தர்ப்பம் அளிக்கும் ரீதியில் மக்கள் கொரியாவும், மக்கள் சீனுவும் புதிய ஆலோசனைகளை சமர்ப்பித்தன. கொரியப் போர் நிறுத்தத்திற்கு வகை செய்யும் இந்த ஆலோசனைகளை சோவியத் யூனியன் உடனே ஒப்புக்கொண்டு ஆதரவளித்தது. சர்வதேசப் பிரச்னைகளைத் தீர்க்க திட்டவட்டமான பதிலை எதிர்பார்ப்பவர்களுக்கு மேற்கூறிய உண்மைகளின் முக்கியத்துவம் நன்கு புலனாகும்.

ஜனநாயக சமாதான கோட்பாடுகளின் அடிப்படையில் ஜெர்மனியின் தேசிய ஐக்கியம் பாதுகாக்கப்படவேண்டும் என்பதை யார்தான் மறுக்கவும், மறக்கவும் முடியும்? இந்த முக்கியமான சர்வதேசப் பிரச்னையை யார்தான் புறக்கணித்து ஒதுக்கமுடியும்?

ஆனால் அமெரிக்க ஜனாதிபதியின் பேச்சு ஜெர்மன் பிரச்னையைத் தீர்க்க எத்தகைய ஆதாரத்தையும் அளிக்கவில்லை. ஜெர்மன் பிரச்னையைப்பற்றி நான்கு வல்லரசுகள் செய்துகொண்ட போட்ஸ்டாம் ஒப்பந்தத்தை அவர் புறக்கணித்துவிட்டார். ஐரோப்பாவில் நிரந்தர சமாதானத்தை நிலைநாட்டுவதற்காக சோவியத் யூனியன் தொடர்ந்து, விடாப்பிடியாக முயற்சித்து வந்திருக்கிறது. சமாதானக் கோட்பாடுகளை மனதிற்கொண்டு, ஜெர்மன் பிரச்னையை சுமுகமாகத் தீர்ப்பதுதான் அறிவுடைமையென்று கருதினால், சோவியத் யூனியன், அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் முதலிய நான்கு வல்லரசுகளும் சேர்ந்து செய்துகொண்ட முக்கியமான சர்வதேச ஒப்பந்தங்களைப் புறக்கணித்து மறந்துவிட முடியாது.

ஜெர்மன் ஒற்றுமை மேற்கூறிய உண்மைகளை ஒப்புக்கொள்ள ஆங்கிலோ அமெரிக்க முகாம் மறுத்துவிட்டு, ஜெர்மன் ஒற்றுமையை சீர்குலைக்கும் ரீதியில் மேற்கு ஜெர்மனியை ஆயுதபாணியாக்கினால், பழிவாங்கும் மனப்போக்கு கொண்டோரிடம் மேற்கு ஜெர்மன் அதிகாரத்தை ஒப்படைத்தால், அதன் விளைவு விபரீதமாகும். இதன் காரணமாக ஜெர்மன் மக்கள் மட்டுமின்றி, சமாதானம் விரும்பும் ஐரோப்பிய மக்கள் அனைவருமே, முற்போக்கு மனித வர்க்கமே பாதிக்கப்படும்.

தங்கள் தேசத்தை ஐக்கியப்படுத்துவதற்கு ஜெர்மன் மக்களுக்கு சந்தர்ப்பமளிக்கவும்; ஜெர்மனியிலிருந்து நான்கு வல்லரசுகளும் துருப்புகளை வாபஸ் வாங்குவதற்கும் வகை செய்யக்கூடிய ரீதியில் உடனடியாக ஜெர்மனியுடன் சமாதான ஒப்பந்தத்தைச் செய்துகொள்ள வேண்டும்.

### மக்கள் சீனுவின் தேசிய உரிமைகள்

பல முக்கியமான சர்வதேசப் பிரச்னைகளைப்பற்றி ஐசனோவர் தம்முடைய பேச்சில் சொல்லியிருந்தபோதிலும், மக்கள் சீனுவைப்பற்றியோ, ஐக்கிய நாடுகளில் மக்கள் சீனுவுக்குள்ள தேசிய உரிமைகளைப் பற்றியோ குறிப்பிடவேயில்லை. டைவான் (பார்மோசா) தீவின் மீது மக்கள் சீனுவுக்குள்ள உரிமையைப் பற்றியும் எதுவும் குறிப்பிடவில்லை. இந்தப் பிரச்னை இன்றுள்ள மிக முக்கியமான சர்வதேசப் பிரச்னையில்லையென்று [யா]ராவது கூறமுடியுமா?

இருந்தபோதிலும் சீனப் பிரச்னைக்கு ஐசனோவர் எத்தகைய வெளிச்சமும் அளிக்கவில்லை. கடந்துபோன சரித்திர சம்பவங்களைப் பின்னுக்குத் தள்ளும் கொள்கையை சீனுவின்பால் அமெரிக்கா கடைப்பிடிக்க முயற்சிக்கிறது என்பதே இதன் மூலம் தெளிவாகிறது. இந்தக் கொள்கை நிச்சயமாகப் படுதோல்வியடையும் என்பது கண்ணவிந்து போகாத எந்த மனிதனுக்கும் தெட்டெனப் புலனாகும்.

### சொல்லும் செயலும்

"சமாதானம், சகோதரத்துவம், நியாயம், ஒவ்வொரு தேசத்திற்கும் தனக்கிஷ்டமான அரசாங்க அமைப்பையும், [பொ]ருளாதார முறையையும் [நிர்ண]யித்துக்கொள்ளும் உரி[மை], இதர தேச விவகாரங்க[ளில்] மற்றொரு தேசம் தலை[யிடாமை]" முதலிய [...]ங்கள்தான் உலக [...] அமெரிக்காவின் [...] கொள்கையை நிர்ணயிப்பதாக ஐசனோவர் அறிவித்தார்.

தனது வெளிநாட்டுக்கொள்கையை வரையறுக்க உண்மையில் அமெரிக்கா இந்த அம்சங்களைக் கணக்கிலெடுத்துக் கொண்டால், இதன் விளைவு கொரியப் பிரச்னையிலும், ஜெர்மன் பிரச்னையிலும் சீன சம்பந்தமான விஷயத்திலும் நிச்சயமாகப் புலனாகியிருக்கும். யதார்த்தம் என்னவெனில், இத்தகைய சொல்லுக்கேற்றாற்போல செயல் முறையிருப்பதில்லை. வெறும் வார்த்தையளவில்தான் அமெரிக்கா இத்தகைய சர்வதேசப் பிரச்னைகளைப்பற்றி பேசி வருகிறது. அவைகளைத் தீர்க்க நடைமுறையில் செயலாற்ற முன்வரவில்லை.

### கிழக்கு ஐரோப்பாவை பற்றி

கிழக்கு ஐரோப்பிய மக்களைப்பற்றி ஐசனோவர் குறிப்பிட்டார். இந்நாடுகளிலுள்ள சர்க்கார்கள் இம்மக்கள்மீது வெளியாரால் திணிக்கப்பட்டவை என்ற முறையில் அவருடைய வார்த்தைகள் தொனித்தன. இது உண்மைக்கு முற்றிலும் புறம்பானது என்பதை அனைவரும் அறிவர்.

தங்கள் உரிமைகளுக்காக மிகக் கடினமான போராட்டத்தை நடத்தியதின் மூலமாகத்தான் கிழக்குஐரோப்பிய மக்கள் இன்றைய மக்கள் ஜனநாயக அரசாங்க முறையை சிருஷ்டிக்க முடிந்தது என்பதை யதார்த்த உண்மைகள் தெளிவாக்குகின்றன. இந்தப் புதிய அரசாங்க முறையின் மூலமாகத்தான் இம் மக்கள் தங்கள் தேசப் பொருளாதாரங்களையும், கல்வி, கலாச்சாரங்களையும் மிகவும் துரிதமாக அபிவிருத்தி செய்துகொள்ளுவதும் சாத்தியமாயிற்று என்பதையும் உலகம் அறியும். இந்த மக்களால் தூக்கி யெறியப்பட்ட பிற்[போக்கு]க் கும்பல்களின் ஆ[தி]க்கத்தை மீண்டும் இந்நாடுகளில் நிலைநாட்டுவதற்காக சோவியத் யூனியன் தலையிடும் என எதிர்பார்ப்பது விந்தையினும் விந்தையாகும்.

இதேசமயம் ஜனாதிபதி ஐசனோவர் மற்றொரு தவறும் இழைக்கிறார். அடக்குமுறை, அடிமைத் தனத்தை எதிர்த்து ஆசியாவிலுள்ள காலனி அரைக்காலனி மக்கள் தீவிரமாக நடத்திவரும் விடுதலை இயக்கத்தைத் தடுத்து நிறுத்துவதற்காக சோவியத்யூனியன், "கம்யூனிச உலகில் தனக்குள்ள தீர்மானமான செல்வாக்கை உபயோகப்படுத்தவேண்டும்" என்று அவர் வேண்டுகோள் விடுத்துள்ளார். 'கெட்ட எண்ணங் கொண்டுள்ள ஒருசில தனி நபர்களின் தூண்டுதலின் பேரில்தான் தேசிய விடுதலை இயக்கங்கள் நடைபெறுகின்றன என நினைக்கும் வரையில்' சர்வதேசப் பிரச்னைகளை நன்கு புரிந்துகொண்டு ஒரு சரியான முடிவிற்கு வரமுடியாது.

ஆஸ்திரிய மக்களின் ஜனநாயக உரிமைகளுக்கு மதிப்புக் கொடுப்பதாயிருந்தால், ஏற்கனவே செய்துகொள்ளப்பட்டுள்ள உடன்பாட்டின் அடிப்படையில், ஆஸ்திரியா பிரச்னையையும் சுமுகமாகத் தீர்த்துக்கொள்ளமுடியும் என்பதை மீண்டும் எடுத்துக்கூற விரும்புகிறோம்.

### சமாதானத்தை ஐ.நா. பாதுகாக்கவேண்டும்

உலக மக்கள் அனைவரின் பந்தோபஸ்தையும், சமாதானத்தையும் திறமையுடன் பாதுகாக்கும் ஸ்தாபனமாக ஐ.நா.வை உடனே மாற்றியமைப்பதற்கு தான் தயார் என்று ஐசனோவர் அறிவித்தார்.

தன்னுடைய கடமைகளை ஐ.நா. சரிவர நிறைவேற்றி வராததற்கு பொறுப்பாளி சோவியத் யூனியனல்ல. இருந்தபோதிலும், சமாதானத்தை உறுதிப்படுத்துவதற்கும், சர்வதேச பந்தோபஸ்தை பலப்படுத்துவதற்கும் இந்த ஸ்தாபன நடவடிக்கைகளின் முக்கியத்துவத்தை மேலும் உயர்த்துவதற்கு இன்னும் காலம் தாழ்ந்துவிடவில்லை.

எனவே, இதை மனதிற்கொண்டு ஐ.நா! உறுப்பினர்கள் அனைவரும் ஐ.நா.வின் கோட்பாடுகளை முதலில் கடைப்பிடிக்கவேண்டும். ஐ.நா. சாசனத்தின் அடிப்படையையே புறக்கணிக்கக் கூடாது. தன்னுடைய அயல்நாட்டுக்கொள்கையை நிறைவேற்றிவைக்கும் ஒரு கருவியாக ஐ.நா.வை மாற்றிவிட எந்த சர்க்காரும் முயற்சிக்கக்கூடாது. ஏனெனில் ஐ.நா.வின் கோட்பாடுகளுக்கு இது முரணானது. இதன் மூலம் சமாதானத்தைப் பாதுகாக்கவும், சர்வதேச ஒத்துழைப்புக் கொள்கையைக் கடைப்பிடிக்கவும் முடியாது.

### ரத்து அதிகாரக் கோட்பாடு

சமாதானத்தை நிலைநாட்டும் பிரதானமான [பிரச்னைக]ளில், பந்தோபஸ்து சபையில் உள்ள ஐந்து வல்லரசுகளுக்கு ரத்து அதிகாரம் அளிக்கக்கூடிய முக்கியமான ஷரத்து அடங்கிய சாசனத்தில் 60 ஐ.நா. உறுப்பினர்கள் கையெழுத்துச் செய்திருக்கிறார்கள். எல்லா தேசங்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட இந்த ஷரத்தை ஒரு சில தேசங்கள் நடைமுறையில் புறக்கணித்து விடுவதற்காக அல்ல 60 நாடுகளும் கையெழுத்திட்டிருப்ப[து].

உலகிலேயே மிகப்பெ[ரிய] நாடாக விளங்கும் சீனு பந்தோபஸ்து சபையிலு[ம்] ஐ.நா. பொதுசபையிலும் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளவில்லை. இதற்குப் பதிலாக கோமிங்டாங் கோமாளி பொம்மை ஐ.நா. ஸ்தாபனங்களில் அங்கம் வகிக்கிறது.

இத்தகைய செய்கை ஐ.நா.வைப் பலப்படுத்த உதவுமா? இந்த சூழ்நிலைமைகளில் ஐ.நா. தன்னுடைய பொறுப்புகளையும் கடமைகளையும் சரிவர நிறைவேற்றும் என்று எப்படி நம்பமுடியும்?

எப்படியிருந்தபோதிலும், இந்தப் பிரச்னையையும், இத்தகைய முக்கியமான சர்வதேச

(11-ம் பக்கம் பார்க்க)

### இன்றே செயலில் இறங்குங்கள்!

அக்கிரமமான பொய் வழக்கில், மரண தண்டனை விதிக்கப்பட்டுள்ள சமாதான வீரர்களான ரோசன்பர்க் தம்பதிகளைக் காப்பாற்ற உடனே முன்வாருங்கள். ஆயிரக்கணக்கான கையெழுத்துக்களையும், பொதுக்கூட்டங்களில் நிறைவேற்றப்படும் தீர்மானங்களையும்,

**அமெரிக்க ஸ்தானிகர், புதுடில்லி**

எனும் விலாசத்திற்கு அனுப்புங்கள். உடனுக்குடன் செய்திக் கடிதங்கள் ஜனசக்திக்கு வந்து குவியட்டும்.

மக்கள் அனைவரும் செயலில் இறங்கினால் மரண தண்டனையை ரத்துசெய்யமுடியும். ரோசன்பர்க்குகளைக் காப்பாற்றமுடியும்.

ஜனசக்தி

ஞாயிற்றுக்கிழமை 10-5-'53

# வெள்ளை முதலாளிக்கு விலங்கிடு! டிராம்களை ஓட்டு!

## தொழிலாளருக்கு உடனடி நிவாரணம் கொடு

வெள்ளை முதலாளி புருக்ஸ் டிராம்வேக்களை நிறுத்தி இருபது நாட்களுக்குமேலே ஆகிவிட்டன. 1600 தொழிலாளர்களும் அவர்களது குடும்பங்களும் தெருவில் நின்று திண்டாடும் நிலைமை. அவதிப்படும் தொழிலாளர்கள் உடனடியாக நிவாரணம் வேண்டுமென்றும், கேஸ்களை வாபஸ் வாங்கவேண்டுமென்றும் கோரி நேற்று சென்னை முதல் மந்திரியைச் சந்தித்தனர். பதில் என்ன? உடனடியாக அவர்களுக்கு வேலை கொடுப்பதைப்பற்றி அவரது பதில் என்ன? அங்கு சென்ற தொழிலாளிகளின் மனைவி மக்களுக்கு அளித்த பதில் என்ன? கல்லுங் கரையும் அவர்களது நிலைமையைக் கண்டு ராஜாஜியின் மனம் இளகியதா? இல்லை.

'எல்லாவற்றையும் ஆழ்ந்து கவனிப்பதாக' பதிலளிக்கிறார். அதுமட்டுமல்ல. வெந்த புண்ணில் வேல்கொண்டு பாய்ச்சுவதுபோல் அவரைக் காணச்சென்றவர்களெல்லோரும் தொழிலாளர்கள்தானா என்றுவேறு கேட்கிறார். தொழிலாளர்களல்லாத குழப்பஞ்செய்பவர்கள் அந்தத் தூதுகோஷ்டியில் வந்துள்ளனரா இல்லையா என்பது ராஜாஜியின் கேள்வி. அன்னிய முதலாளியின் ஆணவத்திற்கும் அக்கிரமத்திற்கும் இரையான டிராம்வேத் தொழிலாளர்களின்மேல் கிஞ்சிற்றேனும் ஈவு இரக்கமற்ற முதன்மந்திரி தொழிலாளர்களைப் பார்த்து பேசும் விதம் அது. சோறு கேட்கும் மக்களின்மீது துப்பாக்கிப்பிரயோகஞ்செய்யும், பட்டினியால் சாகும் மக்களை அதிகமாகச் சாப்பிட்டதால் இறந்தனர் என்று கூறும், நியாயங்கோரும் மக்களைத் தடிகொண்டு தாக்கும் 'சாத்வீக' 'காந்தீய' ஆட்சியின் பரம்பரையைச் சேர்ந்த ராஜகோபாலாச்சாரியார் தொழிலாளர்களின் ஆர்ப்பாட்டத்தில் குழப்பக்காரர்களைப் பார்ப்பதில் ஆச்சர்யமில்லை.

டிராம்வே முதலாளியின்மேல் ராஜாஜிக்கு ஆத்திரம் வரவில்லை. அவனது சட்டவிரோதச்செயலை ஒடுக்க சர்க்காருக்குத் தைர்யமில்லை. மாறாக, அமைதியாக ஆர்ப்பாட்டஞ் செய்த 66 தொழிலாளர்களை சிலநாளைக்கு முன்பு கைது செய்து அவர்களின்மேல் வழக்குத் தொடுத்துள்ளது.

ஒரு தொழில் தகராறு சட்டப்படி விசாரணைக்கு விடப்பட்டுள்ளதுபோது கோர்ட்டின் தீர்ப்புவரையில் முன்னிருந்தபடியே தொழிலை முதலாளி நடத்தவேண்டுமென்று இன்றுள்ள சட்டம் கூறுகிறது. சட்டப்படி அந்த முதலாளி தொழிலை நீடித்து நடத்தும்படி சர்க்கார் உத்தரவிடமுடியும். ஆனால் இந்த சட்டம் வெள்ளைக்காரனான புருக்ஸின் முன் செல்லவில்லை. டிராம்வேக்களை மீண்டும் நடத்தும்படி புருக்ஸிற்கு உத்தரவிட தொழில்கோர்ட் சட்டப்படி சென்னை சர்க்காருக்கு அதிகாரமிருந்தும் அதைப் பிரயோகிக்காதது ஏன்? டிராம்களை ஓட்டச்செய்து தொழிலாளர்களுக்கு வேலை கொடுப்பதுடன், தவியாய்த் தவிக்கும் சென்னை மக்களுக்கு சுலபமான போக்குவரத்து வசதியளிக்கவும் சர்க்கார் மறுப்பது ஏன்? காரணமென்ன?

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் காமன்வெல்த்திலிருக்கும் இந்தியாவில் பிரிட்டிஷ் முதலாளிகளுக்குக் கிடைத்துள்ள உரிமை, அந்தஸ்து அவர்கள் இந்த நாட்டுச் சட்டங்களுக்கு அப்பாற்பட்டவர்கள், அவர்களது அக்கிரமங்களுக்கு முடிவுகட்ட இந்த நாட்டு ஆளும் வர்க்கங்களுக்கு அதிகாரமில் [illegible]ன்பதுதான் அடிப்படையான காரணம். ராஜகோபாலாச் [illegible] ரியார் ஆட்சிக்கு—இந்நாட்டின் சட்டத்தைப் புறக்கணிக் [illegible] ஒரு பிரிட்டிஷ் முதலாளிக்கு—உத்தரவிட அதிகார [illegible] கும் [illegible] என்பதையே இது ஊர்ஜிதம் செய்கிறது. அதுமட்டுமில்லை [illegible] ள்ளங் குமுறிக் கொண்டிருக்கும் 1,600 டிராம் [illegible] மல்ல; [illegible] ர்களின் ஆத்திரமும், 14 லட்சம் சென்னை வாசி தொழிலா [illegible] வேசமும் பொங்கி அதில் அந்த ஆணவம் களின் ஆ [illegible] ள்ளை முதலாளி மூழ்கடிக்கப்படாமல் பாதுபடைத்த [illegible] ஏகாதிபத்தியத் தொண்டையே ராஜ காக்க அரும் பெரு [illegible] செய்துகொண்டிருக்கிறது. கோபாலாச்சாரி ஆட் [illegible] ர்களா

இதை இந்நாட்டு மக்கள் அனுமதிக்கப் போகி [illegible] ர்க்கா என்பதுதான் இன்றையப் பிரச்சினை. காங்கிரஸ் ச [illegible] ரின் கையாலாகாத் தனத்தைப் பார்த்துக் கொண்டிருக்கப் போகிறார்களா? 1,600 தொழிலாளிகள் இன்று வெள்ளையனின் தாக்குதலுக்கு இரையாகி இருப்பதை மற்ற தொழிலாளர்கள் பார்த்துக் கொண்டிருக்கப் போகிறார்களா? இந்த நாட்டின் சுதந்திரத்தின்பால், மக்கள் நலனில்பால் அக்கறை கொண்ட கட்சிகள், ஸ்தாபனங்கள் பார்த்துக்கொண்டு வாளாவிருக்கப் போகின்றனரா? இதுதான் பிரிட்டிஷ் முதலாளியான புருக்ஸ் விடுத்துள்ள சவால்.

அரை நூற்றாண்டிற்கு மேலாக வெள்ளையனே வெளியே போ என்று கூறி வீரமிக்க தியாகமிக்க போராட்டங்களை நடத்திய தமிழ் மக்களாகிய நாம் ஒருநாளும் இதை அனுமதிக்க முடியாது.

சின்னஞ்சிறு பாரசீகத்தில் ஆங்கிலோ இரானிய எண் [illegible] கம்பெனியின் ஆதிக்கத்தை எதிர்த்து அந்த நாட்டு [illegible] ள் வெற்றி முழக்கம் கொண்டாடுகிறார்கள். பிரிட்டிஷ் [illegible] ாதிபத்தியத்தின் ஜம்பம் அங்கு சாயவில்லை. எண்ணைக் கிணறுகளை தேசிய மயமாக்கிய அந்நாட்டு சர்க்கார், மக்களின் கிளர்ச்சியால் உந்தப்பட்டு அண்டை நாடு சிலோன், அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் மிரட்டலுக்கு பணியாது சீனாவுடன் வர்த்தக ஒப்பந்தஞ் செய்துகொள்ள முன்வருகிறது. மற்றொரு அண்டை நாடு பர்மா! அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் குறுக்கீட்டை ஐ. நா.வில் அம்பலப்படுத்த அதனுடன் செய்துகொண்ட அடிமை சாசனமான உதவி ஒப்பந்தத்தை ரத்து செய்தது. ஏகாதிபத்திய எதிர்ப்பு, சுதந்திர உணர்ச்சி, தேசபக்தி ஆகியவற்றால் உந்தப்பட்ட மக்களின் போர் முழக்கங்கள் அவை.

ஆனால் ஆறு வருடங்களாக சுதந்திர நாடாக இருப்பதாகச் சொல்லப்படும் இந்தியாவில் வெள்ளையனின் திமிர்த் தாண்டவத்திற்கு இன்னும் ஒரு எல்லை வகுக்கவில்லை. இந்த நாட்டு மக்களும் ஜனநாயக வாதிகளும் இனிமேலும் இதை அனுமதிக்கலாமா? முடியாது. ஒருநாளும் இனிமேல் அனுமதிக்கக் கூடாது.

வெள்ளை முதலாளியே வெளியே போ என்ற கோஷம் தமிழகத்தின் வானதிர முழங்கவேண்டும். வெள்ளை முதலாளிக்கு எதிராக சகல கட்சிகளின் ஒன்றுபட்ட கிளர்ச்சி தமிழகமெங்கும் மேலும்மேலும் வலுவடையச் செய்ய வேண்டும். டிராம்வேக்களை பறிமுதல் செய் என்ற கோஷம் வலுக்கவேண்டும்.

உடனடியாக டிரா [illegible] வண்டிகளை ஓட்டு. தொழிலாளருக்கு நிவாரணம் கொ [illegible] க்க சர்க்கார் உத்திரவிடவேண்டுமென்று மற்ற தொழி [illegible] ர்களும் சகல பகுதி மக்களும் தைர்யமில்லாத செ [illegible] சர்க்காரை நிர்பந்திக்க முன்வரவேண்டுமென்று கே [illegible] றோம்.

# வாரக் குறிப்புகள்

## "வடவேங்கடத்தை விடோம்"

"எல்லைப் பாதுகாப்புக் கமிட்டி", "தமிழரசுக் கழகம்" ஆகியவற்றின் சார்பில், இன்று சித்தூர் ஜில்லாவின் தென் கோடியிலுள்ள சில பல இடங்களில், "வடவேங்கடத்தை விடமாட்டோம்" என்ற கிளர்ச்சி நடைபெற்று வருகிறது. மறியல் உருவத்திலும் ஆர்ப்பாட்ட வடிவத்திலும் இக் கிளர்ச்சி நடைபெறுகிறது.

வேங்கடத்தைப் பெறும் போராட்டத்தில் ம. பொ. சி., விநாயகம் போன்ற மேற்படி கிளர்ச்சியின் தலைவர்கள், ராஜாஜியை மலைபோல் நம்பியிருந்தார்கள். ஆனால், "அரசியல் ரீதியாகப் பார்த்தாலும் பிரத்யக்ஷ உணர்வோடு பார்த்தாலும் திருப்பதி தமிழகத்தோடு சேரமுடியாது" என்று அன்று ஆச்சாரியார் சட்டசபையில் பேசிய பேச்சு இவர்கள் நம்பிக்கையை முறித்தெறிந்து விட்டது.

எனவே இன்று கங்குந்திக் குப்பம், பலமனேரி, சித்தூர், புத்தூர், திருத்தணி, சந்திரகிரி ஆகிய ஆறு தாலுகாக்களும் தமிழ் தாலுகாக்களென்றும் வேங்கடத்தை விடவே மாட்டோமென்றும் கிளர்ச்சி செய்கிறார்கள்.

சித்தூர் ஜில்லாவிலுள்ள தமிழ்ப் பகுதிகள், தமிழகத்தோடு சேரவேண்டும் என்ற உறுதியில் நாம் யாருக்கும் இளைக்கவில்லை.

சித்தூர் ஜில்லாவில் ஆறு தாலுகாக்கள் தமிழ் தாலுகாக்கள் என்பதையும், திருப்பதி தமிழகத்தோடு சேர்ந்தது என்பதையும் நம்மால் ஒப்புக்கொள்ள முடியாது. திருத்தணி தாலுகாவும், புத்தூர், சித்தூர், கங்குந்திக் குப்பம் ஆகிய தாலுகாக்களில் தென் பகுதியில், பிர்க்கா ரீதியாகவும் கிராம ரீதியாகவும் சில பல பகுதிகளும் தமிழகத்தில் சேரவேண்டும் என்றும் புத்தூர் தாலுகாவுக்கப்பால் வடக்கில் சந்திரகிரித் தாலுகாவிலிருக்கிற திருப்பதி, தமிழகத்தைச் சேர்ந்ததென்பது சரியல்லவென்றும் கருதுகிறோம். திருமலை தமிழகத்தின இயற்கையான வடக்கெல்லை என்பதும், ஏழுமலையான் முன் ஓதப்படுகிற நாலாயிரப் பிரபந்தம் தமிழ் நூல் என்பதும் இன்று திருப்பதியை தமிழகத்திற்கு உரியது என்றாக்கிவிடமுடியாது. திருத்தணித் தாலுகாவின் வட கோடியிலிருந்து திருப்பதி வரையில், தொடர்ச்சியாக புத்தூர், சந்திரகிரி இரு தாலுகாக்களில் நெடுகலும் வாழுகிற மக்கள் பெருவாரியாகத் தமிழர்கள் என்று அந்தப் பகுதியில் வாழும் மக்கள் தீர்ப்புக் கூறவேண்டும். இன்று மேற்படி பிரதேசத்திலுள்ள மக்களில்பெரும்பாலர் தமிழர்களென்று உறுதிசெய்யவுமில்லை. எனவே வேங்கடம் தமிழகத்திற்கு உரியதல்ல என்பது நமது கருத்து.

"முதன் முதலில் சித்தூர் ஜில்லாவின் ஆறு தமிழ் தாலுகாக்களும் தமிழகத்தோடு இணைக்கப்படவேண்டும். இல்லாவிடில் ஆந்திர மாகாணம் பிரியாவிட்டாலும் கவலை இல்லை" என்கிறார்கள் எல்லைக்கிளர்ச்சிக்காரர்கள். இந்தக் கருத்தும் நமக்கு உடன்பாடல்ல. ஏன்?

ஆந்திர மாகாணம் பிரிவது, நாளைக்கு விசால ஆந்திரம் அமைவதற்கு மட்டு மல்ல, புதிய தமிழகம், ஐக்கிய கேரளம், சம்யுக்த கன்னடம், ஐக்கிய மகாராஷ்டிரம் முதலியவை அமைவதற்கும் திட்டவட்டமாக முதற்படியாகும். ஆந்திர மாகாணப் பிரிவினை, சித்தூர் ஜில்லா தமிழ்ப்பகுதி, தமிழகத்தோடு இணைவதைத் துரிதப்படுத்துமேயன்றி, காலதாமதப்படுத்தி, ஆந்திரர்களால் விழுங்கி ஏப்பமிடுவதற்குத் துணைசெய்யும் என்று கிளப்புவது தவறு. இது மக்கள் ஜனநாயகக் கிளர்ச்சியின் வலுவைக் குறைத்து மதிப்பிடுவதாகும்.

ஆந்திர மாகாணம் அமைந்ததும், எல்லைக் கமிஷன் மூலமாக தமிழகத்தின் வடக்கெல்லைப் பிரச்னையைத் தீர்த்துக்கொள்ள முடியும். கமிஷனால் முடியாவிட்டால், எல்லைப்புறத்தில், தகராறு ஏற்படும் இடங்களில் சர்வஜன வாக்கெடுப்பின்மூலம் எல்லைவகுப்பது நிச்சயம் சாத்தியம்.

மற்றப்படி, ஆந்திர மாகாணம் உடனடியாக அமைவதற்கு விரோதமாக எந்த உருவத்தில் எந்தக் கிளர்ச்சி தோன்றினாலும், அது தமிழர்களால் வரவேற்கத் தக்கதல்ல. ஆந்திர மாகாணப் பிரிவினைக்கு ஆதரவு அளிப்பதுதான், முழு வடிவங்கொண்ட தமிழகம் விரைவாக மலர்வதற்கு மிகச் சிறந்த ஆரம்ப அரசியல் நடவடிக்கையாகும்.

மற்றப்படி, உரிமையல்லாத இடங்களுக்கு பிடிவாதமாக உரிமை கொண்டாடி, வேகமான கிளர்ச்சிகளில் மக்களின் இனப்பற்றை ஈடுபடுத்துவது, ஆந்திர-தமிழ் மக்களிடையில் அவசியமற்ற கசப்பை வளர்ப்பதில் கொண்டுபோய்விடும். சித்தூர் தமிழ்ப்பகுதி, விரைவில் தமிழகத்தோடு இணைவதற்கும் உதவாது.

நமது வட எல்லைப் பிரச்னையை ஒன்று இன்று நிய[illegible]க்கப்பட இருக்கும் எல்லை கமிஷன்மூலம் தீர்ப்பது அல்[illegible] வெகுஜன வாக்கெடுப்பு[illegible] தீர்ப்பது என்பதுதான் [illegible]மான வழி. ஆந்திர தமிழ[illegible]களிடையே மனக்கசப்பை வளர்க்கும் எந்த நடவடிக்கையிலும் இறங்குவது தவறு என எடுத்துச் சொல்ல விரும்புகிறோம்.

—ஜீவா

# போட்டோ லித்தோ பிரஸ் கதவடைப்பு

போட்டோ லித்தோ பிரஸ் பிரஸ் முதலாளி அக்ரமமாய் சட்டத்தை மீறி 50 தொழிலாளர்களுக்கு மேற்பட்டவர்களை கதவடைப்புச் செய்திருக்கிறான். இக்கதவடைப்பு ஆரம்பமாகி 25 நாட்களுக்கு மேலாகிவிட்டன. தொழிலாளர் தங்கள் நியாயமான கோரிக்கைகளைக் கேட்டனர். முதலாளி அவைகளை மறுத்ததோடல்லாமல், தொழிலாளர்களை பல விதத்தில் பயமுறுத்தி சங்கம் சேராமல் தடுத்தான். உறுதி குன்றாது உற்சாகத்துடன் உருக்குக் கட்டுப்பாடுடன் எதிர்த்தனர் தொழிலாளர்கள். பிறகு பக்தவச்சலு என்னும் தொழிலாளியைப் பழி வாங்கினான். அதுமட்டுமல்லாமல் முதலாளி எல்லா தொழிலாளர்களையும் கடந்த மாதம் 11ம் தேதியன்று வெளியில் தள்ளி கதவைப் பூட்டினான்.

25 நாட்களுக்கு மேலாக தொழிலாளர்கள் மிகவும் சமாதான முறையில் போராடிவருகின்றனர். தங்கள் நியாயமான கோரிக்கைகள் என்ன என்பதைப் பொதுஜனங்களுக்கு எடுத்துரைத்து முதலாளியின் அநியாயத்தை அம்பலப்படுத்தி வருகின்றனர். முதலாளியின் சூழ்ச்சிகளை முறியடித்து வருகின்றனர்.

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

வெளியீடுகளை இங்குதான் கொண்டுவருவதும் தவிர அமெரிக்கன் ரிப்போர்ட்டர் என்ற பத்திரிகையும் இதன் இதன் அச்சகத்தில்தான் அச்சடிக்கப்படுகிறது.

விளம்பரங்கள்மூலமாக, அந்நிய வியாபார ஸ்தாபனங்கள் கூட இந்திய பத்திரிகைகளை ஓரளவிற்குக் கட்டுப்படுத்தி வருகின்றன. இந்திய விளம்பர உலகில் மூன்று அந்நிய கம்பெனிகள் ஆதிக்கம் செலுத்திவருகின்றன, வால்டர், தாம்சன, க்ராண்ட் என்ற இரு அமெரிக்க கம்பெனிகளும், கேமர் என்ற பிரிட்டிஷ் கம்பெனியும் குறிப்பிடத்தக்கன.

இங்குள்ள பத்திரிகை ஏஜென்சிகளும், பிர்லா, கோயெங்கா, இந்து குழுவினால் கட்டுப்படுத்தப்பட்டு இருக்கின்றன.

இந்திய பத்திரிகைகள் தங்களின் சுதந்திரத்தை விரைவில் இழந்து வருகின்றன. அரசாங்கமும் பெரு முதலாளிகளும் சேர்ந்து அவைகளைத் தங்களுக்கு அடிமைப் படுத்திவிட்டனர். 30 வெள்ளிக் காசுகளுக்காக அந்நிய ஏகாதிபத்தியத்திற்கு தாசானுதாசர்களாகிறது.

ஆனால் பணத்தாசைகாட்டி விலைக்கு வாங்க முடியாத பத்திரிக்கைகளும் இருக்கின்றன. அவைகள் எண்ணிக்கையில் குறைந்திருந்தாலும், இந்த சவாலை ஏற்று அதை எதிர்த்து நிற்கின்றன. அரசாங்க அடக்குமுறைகளுக்கும், பெரு முதலாளிகளின் வேட்டை நாய்ப் பாய்ச்சலுக்கும் பயப்படாமல் நிமிர்ந்து நிற்கின்றன. தேசம் பூராவிலுமுள்ள தொழிலாளிகள் கொடுக்கும் அணா, பைசாக்களால் அப்பத்திரிகைகள் நடத்தப் படுகின்றன. பெருப் பணப் பைகள் அவைகளுக்கு பணம் கொடுத்து உதவுவதில்லை.

பெரு முதலாளிகளின் பிடிப்பிலிருந்து பத்திரிகைகள் விடுபடாத வரையில் தங்களுடைய நிலை மேம்படாது என்பதை அறிந்து ஆயிரக் கணக்கான எழுத்தாளர்கள், இந்த சுதந்திரப் பத்திரிகைகளோடு தோளோடு தோள் சேர்[illegible] நிற்கின்றன.

இந்த சக்தி ஒன்[illegible] பலப்படும்போதுதான் [illegible] யாவில் சுதந்திர ப[illegible] கள் நடத்தப்படும்.

# தமிழ்நாடு எங்கும் மேதின விழா

தமிழ்நாடு பூராவும், எண்ணற்ற கிராமங்களிலும் நகரங்களிலும் உலகத் தொழிலாளவர்க்க நாளான மே தினம் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அன்று நடைபெற்ற நூற்றுக்கணக்கான பொதுக் கூட்டங்களில் கீழ்வரும் முக்கியமான கோஷங்கள் எழுப்பப்பட்டன. தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

அரசியல் கைதிகளை விடுதலை செய்க; பஞ்ச நிவாரணம் வேண்டும்; பஞ்சப் பிரதேசங்களில் வரிவஜா செய்யவேண்டும்; சென்னை டிராம்வேயை சர்க்காரே ஏற்று நடத்தவேண்டும்; கொரியப் போரை உடனே நிறுத்துக; ஐந்து வல்லரசு சமாதான ஒப்பந்தம் வேண்டும்; ரோசன்பர்க் தம்பதிகளை விடுதலை செய்க.

## காங்கிரஸ் சங்கத்தின் காலாடித்தனம்

### ஊர்வலத்தின்மீது காலிகள் தாக்குதல்

*ராஜபாளையத்தில் நடைபெற்ற பிரம்மாண்டமான மே தின ஊர்வலத்தை காங்கிரஸ் தொழிற்சங்கக் காலிகள் தாக்கிக் கலைத்தனர். இதன் விளைவாக பத்து தோழர்களுக்குப் படுகாயமேற்பட்டது. இருவரின் நிலை கவலைக்கிடமாயிருக்கிறது. மேலும் 50 பேர்களுக்கு லேசான காயங்கள் ஏற்பட்டன. நகரில் 144 தடையுத்தரவு பிரகடனம் செய்யப்பட்டுள்ளது.*

மே தினத்தை இவ்வருடம் சிறப்பாகக் கொண்டாடுவதற்காக பல சங்கங்கள், ஸ்தாபனங்களின் சார்பில் விமரிசையாக ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. நகரின் பல பகுதிகளில் செங்கொடிகளும், தோரணங்களும் கட்டப்பட்டன.

மாலை 4 மணிக்கு ஏராளமான பெண்கள் உள்பட சுமார் 2000 மக்கள் தொழிற்சங்க ஆபீசிலிருந்து அணிவகுத்து ஊர்வலமாகப் புறப்பட்டனர். மேதின கோஷங்களை முழங்கிய வண்ணம், பல கோரிக்கைகள் பொறிக்கப்பட்ட பதாகைகளைக் கையிலேந்தி ஊர்வலம் நகர்ந்து சென்றது. நூற்றுக்கணக்கான செங்கொடிகள் கம்பீரமாகப் பறந்தன. இவ்வளவு பெரிய தொழிலாளர் ஊர்வலத்தை ராஜபாளையம் நகர் இதுவரை என்றுமே கண்டதில்லை.

ஊர்வலம் ஜவாஹர் மைதானத்தை அடைந்தவுடன், ஏற்கனவே முன்னேற்பாடுகள் செய்து வைத்திருந்த காங்கிரஸ் காலிகள் ஊர்வலத்தின் மீது கற்களை வீசித் தாக்கினர். காங்கிரஸ்பிரமுகர் பீமராஜா வீட்டின் அருகிலிருந்தும், முன்னாள்முதலமைச்சர் குமாரசாமி ராஜா வீட்டின் அருகிலிருந்தும் ஏராளமான கற்கள் ஊர்வலத்தினர் மீது வந்து விழுந்தன. இதுமட்டுமின்றி, தடிகளாலும் ஊர்வலத்தைக் காலிகள் தாக்கினர். பெண்களும் அடித்துநொறுக்கப்பட்டனர். தேசிய தொழிற்சங்கத்தைச் சேர்ந்த இந்த குண்டர்களின் தாக்குதலின் விளைவாக பத்து தோழர்கள் படுகாயமுற்றனர். மேலும் 50 பேர்கள் லேசான காயங்களை அடைந்தனர்.

ராமநாதபுரம் ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினரும், ராஜபாளையம் மில் தொழிலாளர் சங்கக் காரியதரிசியுமான தோழர் ஏ. ஸ்ரீனிவாசனும், மில் தொழிலாளர் சங்கத்தின் பிரதான ஊழியரும், ராமநாதபுரம் ஜில்லா சதி வழக்கில் 3 வருடம் தண்டிக்கப்பட்டு சமீபத்தில் சிறையிலிருந்து வெளிவந்தவருமான தோழர் அழகப்பாவும் காங்கிரஸ் குண்டர்களால் அடித்து நொறுக்கப்பட்டனர். இவர்களின் நிலைமை கவலைக்கிடமாயிருக்கிறது. தோழர்கள் சிங்கத்திருளத் தேவர், முத்து செட்டியார் முதலிய இருவரின் நிலைமையும் மோசமாகயிருக்கிறது. மில் தொழிலாளர்களாகிய அழகர்சாமி, காளிமுத்து, திருப்பதி, பாலசுப்ரமணியம், அழகர், இஸ்மெயில் முதலிய தோழர்களுக்கும் பலத்த காயங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

மில் தொழிலாளர் சங்கத்திற்கும், காங்கிரஸ் ஐ.என்.டி.யு.சி. சங்கத்திற்கும் மேதின ஊர்வலம் நடத்த போலீஸ் அனுமதி கொடுத்திருந்தும், சரியான பந்தோபஸ்து ஏற்பாடுகள் செய்யவில்லை. மில் தொழிலாளர் சங்க ஊர்வலத்திற்கு எத்தகைய பாதுகாப்பும் அளிக்கப்படவில்லை. அதற்கு மாறாக காங்கிரஸ் சங்கத்திற்கு ரிசர்வ் போலீஸ் பாதுகாப்பு கொடுக்கப்பட்டிருந்தது. காயமடைந்த தோழர்களுக்கும் உடனடியாக சரியான சிகிச்சை அளிக்கப் படவில்லை.

காங்கிரஸ் குண்டர்கள் அமைதியான ஊர்வலத்தை தாக்கிக் கலைத்தபோது, போலீஸ் சும்மாகைகட்டிஇருந்தது கண்டு மக்கள் மிகவும் ஆத்திரமடைந்துள்ளனர். காலிகள் தாக்குதலுக்குபோலீசும் உடந்தையோ என்று மக்கள் சந்தேகிக்கின்றனர்.

### கடலூர் ஓ. டி.

செல்லங்குப்பம் துறைமுகத் தொழிற் சங்கத்திலிருந்து 500 பேர்கொண்ட ஊர்வலம் புறப்பட்டு கடலூர் செல்வந் திடலை யடைந்தது. தோழர் அமிர்தலிங்கம் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் சுமார் 2000 பேர்கள் திரண்டிருந்தனர். நெல்லை சதிவழக்கில் ஜன்ம தண்டனை யடைந்து சமீபத்தில் விடுதலையடைந்த தோழர் பி. மாணிக்கமும், தோழர்கள் விக்கிரமன், ஏகாம்பரம், தையல்நாயகியம்மாள், இ. டி. வேலாயுதம் பிள்ளை முதலியோரும் சொற்பொழிவாற்றினர்.

### மேட்டுப்பாளையம்

கம்யூனிஸ்ட் கட்சி சார்பிலும், ரயில்வே, மோட்டார் தொழிற்சங்கங்களின சார்பிலும் மே தினம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. நகரின் பல இடங்களில் செங்கொடிகள் ஏற்றப்பட்டன. காலையில் 70 தொண்டர்கள் செங்கொடிகள் தாங்கி சைக்கிள் ஊர்வலம் நடத்தினர். தோழர் வெள்ளியங்கிரி தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில், தோழர்கள் சதாசிவம், கருப்பண்ணன், நாராயணசாமி செட்டியார், வில்லியம்ஸ் முதலியோர் பேசினர்.

### மண்டபம்

"ரயில்வே லேபர் யூனியனை அங்கீகாரம் செய்!" என்ற இடிமுழங்கும் கோஷங்களுடன் ரயில் நிலயத்திலிருந்து ஊர்வலம் புறப்பட்டு கடை வீதிகளைச் சுற்றி சங்கத் திடலையடைந்தது. தோழர் ஆர். பாலகிருஷ்ணன் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் தோழர்கள் நல்லதம்பி, சங்கரன், சம்பந்தம் முதலியோர் சொற்பொழிவாற்றினர்.

### கரூர்

கரூர் நகரசுத்தித் தொழிலாளர்கள் சங்கத்தின் சார்பாக சுமார் 800க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் மேளதாளம், கரகம், பாண்டுவாத்தியங்களுடன், பல செங்கொடிகள் தாங்கி கோஷங்களை முழங்கிய வண்ணம் ஊர்வலமாகச் சென்றனர். இந்த ஊர்வலத்தில் மோட்டார், கைத்தறி, ஓட்டல், கைவண்டித் தொழிலாளர்களும் இதரர்களும் கலந்துகொண்டனர். தோழர் உடையவர் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர்கள் குருசாமி, சந்திரசேகரன், பசுபதி முதலியோர் பேசினார்கள். பொதுக்கூட்டத்திற்கு ஒலிபெருக்கி வைத்துக் கொள்ள போலீஸ் அனுமதி மறுத்துவிட்டது.

### ஈரோடு

கம்யூனிஸ்ட் கட்சி, தொழிற் சங்கங்கள், விவசாய சங்கங்கள், வாலிபர் சங்கங்களின் சார்பில் ஈரோட்டில் மே தினம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. காலையில் சைக்கிள் ஊர்வலம் நடத்தப்பட்டது. 25 கொடிமரங்களில் செங்கொடிகள் ஏற்றப்பட்டன. மாலையில் ரயில்வே லேபர் யூனியன் மைதானத்தில் சிறுவர், சிறுமிகளுக்காகப் பலவித விளையாட்டுப் போட்டிகள் நடைபெற்றன.

தொழிற்சங்க மைதானத்திலிருந்து மாலையில் பெரிய ஊர்வலம் புறப்பட்டு நகரின் முக்கிய வீதிகளைச் சுற்றிவந்தது. 5 மைல் தூரத்திலிருந்து 50 விவசாயிகள் செங்கொடிகள் தாங்கி கோஷங்களை முழக்கிக்கொண்டு கூட்டத்திற்கு வந்தனர். தோழர் வி. சவரிமுத்து செங்கொடியேற்றினார். பின்னர் அவர் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் தோழர்கள்: பி. ராமமூர்த்தி, சென்னையன், நாச்சிமுத்து, கே. டி. ராஜு முதலியோர் சொற்பொழிவாற்றினர்.

கடும் மழை பெய்திருந்த போதிலும் ஈரோடுக் கடுத்த ரகுபதி நாய்க்கன் பாளையத்தில் மே தினக் கூட்டமும், பின்னர் ஏழையின் கண்ணீர் என்ற நாடகமும் நடத்தப்பட்டது. ஆர். கே. சின்னப்பா கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். தோழர்கள் மாரப்பன், சாம்பசிவம், சவரிமுத்து முதலியோர் சொற்பொழிவாற்றினர்.

ரெயில்வே தொழிற்சங்கம், மற்றும்பல தொழிற்சங்களின் சார்பில் போத்தனூரில் மேதின ஊர்வலம் நடத்தப்பட்டது. பல இடங்களில் தோழர் சதாசிவம் செங்கொடி ஏற்றிவைத்தார்.

சின்னாளப்பட்டியில் தோழர் கதிர்வேல் தலைமையிலும்; அன்னவாசல் விவசாயிகள் சங்கத்தின் ஆதரவில் ஊர்வலமும் தோழர் பி. கணபதி தலைமையில் பொதுக் கூட்டமும், சேலம் தாலுக்கா காட்டூர் கிராமத்தில் விவசாய சங்க ஆதரவில் தோழர் இளங்கோவின் தலைமையில் மேதின ஊர்வலமும், கூட்டமும் நடைபெற்றன. மேலும், திண்டிவனம் முருங்கம்பாக்கம் கிராமத்தில் திரு. எம். வேணுகோபால், எம். எல். ஏ. தலைமையிலும், தொட்டம்பட்டியில் தோழர் எம். அருணாசலம் தலைமையிலும், மேதினக்கூட்டங்கள் நடைபெற்றன.

சங்கரன்கோவிலில் தோழர் எம். அருணகிரியின் தலைமையில் நடைபெற்ற மேதினக் கூட்டத்தில் தோழர்கள் இ. எஸ். சுப்பையா, சு. சுப்பிரமணியம் (ஐ. மு. காரியதரிசி), டி. ஆர். சுப்பிரமணியம் (தி. மு. க.) முதலியோர் சொற்பொழிவாற்றினர்.

காரைக்குடியில் தோழர் கே. கனையா தலைமையில் நடைபெற்ற மேதினப் பொதுக் கூட்டத்தில் தோழர்கள்: வி. ராமசாமி, எஸ். சண்முகம், கருப்பஞ் செட்டியார், கண்ணப்பன முதலியோர் சொற்பொழிவாற்றினர்.

## மதுரையில் $1\frac{1}{2}$ மைல் நீள ஊர்வலம்

## 25,000 மக்கள் திரண்ட பொதுக்கூட்டம்

*மதுரை நகரில் **மேதினம்** மிகவும் சிறந்த முறையில் கொண்டாடப்பட்டது. நூற்றுக்கணக்கான செங்கொடிகளுடன் ஒன்றரை மைல் நீளம் பிரம்மாண்டமான ஊர்வலம் நடத்தப்பட்டது. 25,000 பேர்கள் திரண்டிருந்த மாபெரும் மேதினப் பொதுக்கூட்டமும் நடைபெற்றது.*

மே தினத்திற்கு முன் தினம் இரவு மதுரை நகர் தூங்கவேயில்லையென்று கூறலாம். எங்கு பார்த்தாலும தோரணங்கள், போர்டுகள், கோஷங்கள் பொறித்த அட்டைகள், செங்கொடிச் சின்னங்களைத் தரையில் எழுதுதல், கோலங்கள், கொடியலங்காரங்கள் முதலிய வேலைகளில் குடும்பம் குடும்பமாக நூற்றுக்கணக்கான மக்கள் ஈடுபட்டிருந்தனர்.

மே தினத்தன்று மதுரை நகரில் எங்கு நோக்கினும் சிவப்பு மயம். யானைக்கல்லிலிருந்து புது ஜெயில் ரோட், மணிநகரத்திலிருந்து திருப்பரங்குன்றம் ரோட், அனுப்பானடியிலிருந்து விளக்குத்தூண், கீழமாசி வீதியிலிருந்து கோரிபாளையம் இம்மாதிரி 4 சதுரமாகப் பார்த்தால் எந்தப் பக்கம் போனாலும் செங்கொடியின் கீழ்தான போகவேண்டும். பல சந்துகளும், வீதிகளும் மிகவும் கவர்ச்சிகரமாக அலங்கரிக்கப்பட்டிருந்தன.

மேதினத்தன்று அதிகாலை ஐந்து மணிக்கு கம்யூனிஸ்ட் கட்சி ஆபீஸ், பஞ்சாலைத் தொழிற்சங்கம், மோட்டார் லேபர் யூனியன் இன்னும் பல தொழிற்சங்கங்களில் செங்கொடிகள் ஏற்றப்பட்டன. பின்னர் கட்சித் தோழர்களும் தொழிற்சங்க ஊழியர்களும், கட்சிக் கௌன்சிலர்களும் நகரின் பல பாகங்களுக்குச் சென்று வீதிகளில் செங்கொடிகள் ஏற்றிவைத்தனர். நகரிலும், சுற்றியுள்ள கிராமங்களிலுமாக சுமார் 350 செங்கொடிகள் ஏற்றி வைக்கப்பட்டன.

### ஊர்வலம்

மாலை 3 மணி முதல் சிறு சிறு ஊர்வலங்கள் தங்கள் ஏரியாக்களில் சுற்றி பஞ்சாலைத் தொழிலாளர் யூனியனுக்கு வந்து சேர்ந்தது. சரியாக 5 மணிக்கு ஊர்வலம் புறப்பட்டது. முதலில் ஒரு செஞ்சட்டை வீரர் குதிரை மீது கொடிதாங்கிச் செல்ல, பிறகு வண்டிமீது நகரா அடித்து மற்றொரு செந்தொண்டர் செல்ல, உலக மேதை தோழர் ஸ்டாலின் படத்தை பூ பல்லக்கில் வைத்து பிரமாதமாக அலங்கரித்து வண்டியில் இணைத்துச் செல்ல ஊர்வலம் புறப்பட்டது.

இதைத்தொடர்ந்து உலக பூகோள உருண்டை (5 அடி உயரம், 5 அடி சுற்றளவு செய்யப்பட்டது) யில் சோவியத், சீன பாகங்கள் சிவப்பு மயமாகவும், ஜனநாயக சர்க்காருள்ள தேசங்களை சிவப்பு சின்னங்களால் கோடிட்டுக் காட்டியும், செய்யப்பட்டு ஊர்வலத்தில் எடுத்துச் செல்லப்பட்டது, சகலரையும் வியப்படையச் செய்தது.

அதைத் தொடர்ந்து, 7வயது, 8வயது நிரம்பிய சிறு பெண் குழந்தைகளின் கண்டவர்களைக்கவர்ச்செய்யும் முறையில் கரக விளையாட்டு, ஆண் குழந்தைகளின பண்டையத் தமிழனின வீரத்தின் எடுத்துக் காட்டான சிலம்ப விளையாட்டு, கோலாட்டம், கொம்பு, உருமிக் கொட்டுகள், விவசாயக் கருவிகள், கலப்பைகள், வண்டிகள், பேண்ட் வாத்தியங்கள், மேளங்கள் முதலியவைகள் சென்றன.

கடைசியாக, செஞ்சட்டைத் தொண்டர்கள் நூற்றுக்கணக்கானவர்கள் அணிவகுத்துச் செல்ல, பஞ்சாலை, மோட்டார், ரயில்வே, நகரசுத்தி, ஜட்கா, ரைஸ், ஹோட்டல் போன்ற தொழிலாளர்கள் தங்கள் தங்கள் குறைகளடங்கிய அட்டைகள், பேனர்கள் தாங்கி கோஷமிட்டு பின் தொடர மதுரை நகர் பெண்கள் சங்க சார்பில் நூற்றுக்கணக்கான பெண்களும் பங்கு கொள்ள பல முக்கிய தெருக்கள் வழியாக சுற்றி 5-மணிக்கு ஆரம்பித்த ஊர்வலம் 9 மணிக்கு திலகர் திடலையடைந்தது.

ஆயிரக்கணக்கான பொது மக்கள், குடும்ப சகிதமாக இரண்டு பிளாட்பாரங்களிலும் நின்று ஊர்வலத்தை எதிர்கொண்டழைக்க மணிக்கணக்காக காத்திருந்து தங்களது ஆனந்தத்தை வெளிப்படுத்தினார்கள்.

இவ்வருட மேதினம் ஒரு மிகப்பெரிய தேசியத் திருவிழா போன்று காட்சியளித்தது. மேதினத்திற்கான எல்லா செலவுகளையும் பொது மக்கள்தான் மனமுவந்து கொடுத்து விழாவை நடத்தியுள்ளார்கள் என்பது மிகவும் குறிப்பிடத் தக்கது.

இரவு 9 மணிக்கு 25,000 பேர்கள் திரண்டிருந்த பொதுக்கூட்டம் நடைபெற்றது. பஞ்சாலைத் தொழிலாளர் சங்கப பொதுக்காரியதரிசி தோழர் வி. கார்மேகம் தலைமை வகித்தார். தோழர் வி. மதனகோபால் சொறபொழிவாற்றினார். தோழர் ஏ. பி. பழனிசாமி மேதினப் பிரதிக்ஞையை வாசிக்க, பொதுக் கூட்டத்தில் உள்ள அனைவரும் எழுந்து நின்று திரும்பக் கூறி பிரதிக்ஞை எடுத்துக் கொண்டனர்.

# "எங்களை விடுதலை செய்யவும்!"

## மந்திரியிடம் மதுரை சிறை கம்யூனிஸ்ட் கைதிகள் கோரிக்கை

*விக்கிரமசிங்கபுரம் கம்யூனிஸ்ட் தலைவர்களில் ஒருவரும், தொழிலாளர் தலைவருமான தோழர் **கே. பி. எஸ். மணி**, மற்றும் 9 பேர்கள் இப்போது 5 வருடம் முதல் 20 வருடம் வரை தண்டனை கொடுக்கப்பட்டு மதுரை சிறையில் இருக்கிறார்கள். சென்னை ராஜ்ய சர்க்கார் சிறை மந்திரி திரு. குட்டிகிருஷ்ண மேனன் மதுரை சிறைக்கு 11-4-53ல் விஜயம் செய்தபோது, அவர்கள் கீழ்க்கண்ட கோரிக்கைகளடங்கிய யாதாஸ்தை மந்திரியிடம் சமர்ப்பித்தனர்:*

சதி வழக்குகளிலும், மற்றும் பல வழக்குகளிலும் தண்டிக்கப்பட்ட அரசியல் கைதிகள் விடுதலை செய்யப்பட வேண்டுமென்று சென்னை ராஜ்யம் பூராவும் மக்கள் மீண்டும் மீண்டும் கிளர்ச்சி செய்து வருகிறார்கள். இப்போதும் கிளர்ச்சி தொடர்ந்து நடந்து வருகிறது. ஆயினும் சர்க்கார் பொதுஜன அபிப்ராயத்திற்கு செவி சாய்க்காமல் இன்னும் அரசியல் கைதிகளை சிறையில் வைத்துள்ளனர். தேர்தலுக்குப் பிறகு இரண்டு சதி வழக்குகள் வாபஸ் வாங்கப்பட்டன. அவைகளில் தண்டிக்கப்பட்டவர்கள் அனைவரும் ஆகஸ்டு 1952ல் விடுதலை செய்யப்பட்டனர். ஆனால் திருநெல்வேலி, ராமநாதபுரம் சதிவழக்குகள் இன்னும் வாபஸ் வாங்கப்படவில்லை, அவ்வழக்குகளில் தண்டிக்கப்பட்டவர்கள் விடுதலையும் செய்யப்படவில்லை. ராமநாதபுரம் சதிவழக்கில் தண்டிக்கப்பட்டவர்கள் உயர்நீதிமன்ற உத்தரவின் பேரில் ஜாமீனில் விடுவிக்கப்பட்டுள்ளனர். திருநெல்வேலி சதிவழக்கில் தண்டிக்கப்பட்டவர்களாகிய எங்களில் 6 பேர்கள் விடுதலை செய்யப்பட்டனர். மற்றவர்கள் இன்னும் சிறையில் இருக்கிறோம். இது தவிர இரண்டாவது நெல்லை சதிவழக்கு ஒன்று தோழர்கள் கே. பாலதண்டாயுதம், வா. மீனாட்சிநாதன், அருணாசலம் ஆகியோர்மீது நடக்கிறது அவர்கள் ஜாமீனில் விடப்பட்டுள்ளனர். ஆயினும் தனிப்பட்ட வழக்குகளில் தண்டிக்கப்பட்டவர்களும், திருநெல்வேலி சதிவழக்கில் தண்டிக்கப்பட்டவர்களுமாகிய நாங்கள் இன்னும் சிறையிலிருக்கிறோம். இவ்வழக்கில் தண்டிக்கப்பட்ட 10 பேர்களாகிய எங்களில் 6 பேர்கள் ஜன்ம தண்டனையும், மூன்று பேர்கள் 5 வருடங்களும், ஒருவர் ஒரு வருடமும் கொடுக்கப்பட்டுள்ளோம்.

எங்களில் பெரும்பகுதி 20 முதல் 30க்குள் வயது உள்ளவர்கள். அதிக வயதுடையவருக்கு வயது 35ம் குறைந்த வயதுடையவருக்கு 25 ஆகிறது. நாங்கள் 1949 ஆகஸ்ட் முதல் 1952 ஆகஸ்டுவரை விசாரணைக் கைதிகளாக இருந்தோம் ஆகஸ்ட் 12, 1952ல் தண்டிக்கப்பட்டோம். இப்போது நாங்கள் தண்டனையடைந்து 8 மாதங்களாகிறது. எங்களுக்கு விசாரணை காலத்தில் ஜாமீன கூட மறுக்கப்பட்டது. ஆகவே இவ்வழக்கில் கடந்த 3¼ வருடமாக சிறையில் இருந்து வருகிறோம்.

இந்தக் காலகட்டத்திற்குள் எங்களில் பலர் நெருங்கிய உற்றார், உறவினரை இழந்துள்ளோம். அவர்களுக்கு மரியாதை தெரிவிக்கக்கூட எங்களை ஜாமீனில் விடவில்லை. இந்த வழக்கில் ஒரு வருட தண்டனை விதிக்கப்பட்டுள்ள தோழர் எஸ். முனுசாமியின் தந்தை செஷன்சில் விசாரணை நடந்துகொண்டிருக்கும்போது இறந்தார். ஆர். கிருஷ்ணன் தன் தாயாரை இழந்தார். அவர் தன் தாயை சாவதற்கு முன் பார்க்கக்கூட அனுமதிக்கப்படவில்லை. வழக்கின பூர்வாங்க விசாரணை நடந்து கொண்டிருக்கும் போது தோழர் அழகமுத்துவின தகப்பனார் இறந்தார். அவருக்கும் ஜாமீனளிக்கப்படவில்லை.

நாங்கள் எல்லோரும் பல்வேறு சந்தர்ப்பங்களில் முற்றிலும் மாறுபாடான சூழ்நிலைமை இருந்தபோது கைது செய்யப்பட்டோம். இப்போது நிலைமை மாறிவிட்டது. இது போன்ற குற்றங்கள் சாட்டப்பட்டுள்ள பல கம்யூனிஸ்ட் தலைவர்கள் விடுவிக்கப்பட்டுள்ள சூழ்நிலைமையில், எங்களையும் மற்றும் சகல அரசியல் கைதிகளையும் தாமதமின்றி உடனடியாக விடுதலை செய்ய வேண்டும்.

### கே. பி. எஸ், மணி பரோல்

அவருடைய தந்தை 22-2-53ல் இறந்தார். தோழர் மணிதான் முதல் மகன். அவருடைய தாயாரும், குடும்பமும் இப்போது கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றனர். ஆகவே அவர், உடனடியாக பரோல் கொடுக்கவேண்டுமென்று சர்க்காருக்கு மனுச் செய்து கொண்டுள்ளார். 15 நாட்களுக்கு பரோல் சர்க்கார் அனுமதித்துள்ளது என்று தெரிவிக்கப்பட்ட போதிலும், இன்னும் அவர் பரோலில் விடுதலை செய்யப்படவில்லை.

தண்டனை யடைந்த பிறகு நாங்கள் உடனடியாக எங்களை முதல்வகுப்புக் கைதிகளாக நடத்தவேண்டும் என்று சர்க்காருக்கு மனுச் செய்தோம். விசாரணைக் கைதிகளாக இருக்கும்போது நாங்கள் 10 பேரில் 5 பேர்களுக்கு முதல் வகுப்புக் கொடுக்கப்பட்டிருந்தது. இது விஷயமாக தோழர்கள் பி. ராமமூர்த்தி (சட்டசபை எதிர்க் கட்சித் தலைவர்) எம். கல்யாண சுந்தரம், எம்.எல்.ஏ.யும் சர்க்காருக்கு தெரியப்படுத்தினர். இதுவரை எங்களை முதல் வகுப்புக் கைதிகளாக நடத்த உத்தரவு வந்து சேரவில்லை. சர்க்கார் இவ்விஷயத்தைக் கவனித்து ஆவன செய்யவேண்டும்.

பொதுவாக அரசியல் கைதிகளுக்கு முன்பெல்லாம் வேலை கொடுக்கப்படவில்லை. ஆகவே எங்களுக்கு வேலை கொடுக்கக்கூடாது.

தமிழ்நாட்டிலுள்ள கம்யூனிஸ்ட் கைதிகள் பிரதானமாக சேலத்தில் வைக்கப்பட்டுள்ளனர். அவர்கள் பல்வேறு ஜில்லாக்களைச் சேர்ந்தவர்கள். அவர்கள் அதிகச் செலவில்லாமல் தங்கள் குடும்பத்தினரைப் பேட்டி காண வசதியாக பிரதேச சிறைகளுக்கு மாற்றப்படவேண்டும். ஆகவே மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களைச் சேர்ந்த கம்யூனிஸ்ட் கைதிகள் மதுரை மத்திய சிறைக்கு மாற்றப்படவேண்டும்.

எங்களுக்கு இப்போது மாதம் இரண்டு கடிதங்களும், இரண்டு பேட்டிகளும் அனுமதிக்கப்பட்டுள்ளன. நாங்கள் எங்கள் சொந்தச் செலவில் அதிக லெட்டர்கள் எழுத அனுமதிக்கப்படவேண்டும்.

சமீபகாலம்வரை எங்களுக்கு சர்க்கார் செலவில் கொடுக்கப்பட்டுவந்த 'இந்து'ப் பத்திரிகை ஜனவரி 1953 முதல் நிறுத்தப்பட்டுவிட்டது. அது தொடர்ந்து கொடுக்கப்பட வேண்டும். சமையல் செய்யப்படாத உணவுப் பொருள்களை வெளியிலிருந்து வாங்கி சாப்பாட்டுடன் சேர்த்து சாப்பிட அனுமதி கொடுக்கவேண்டும். சொந்த படுக்கையும், சொந்த உடைகளையும் உபயோகிக்க அனுமதிக்கவேண்டும்.

சாயங்கால நேரத்தில் விளையாடுவதற்கு அனுமதிக்க வேண்டும். பீடி, வெற்றிலை, பாக்கு, புகையிலை போன்ற சாமான்களை வாங்கிக்கொள்ள அனுமதி அளிக்கவேண்டும். நோட் புஸ்தகம், பேனா, பென்சில் முதலியவைகளை அனுமதிக்கவேண்டும்.

கம்பளி போர்வைக்குப் பதிலாக திருச்சியில் கொடுக்கப்படுவது போன்று துணிப் போர்வைகளை கொடுக்க வேண்டும்.

மாதத்திற்கு இரு தடவைகளில் 2 அவுன்ஸ் நல்லெண்ணெய் சகல கைதிகளுக்கும் கொடுக்கப்படவேண்டும்.

சாதாரணமாக சகல 'சி' கிளாஸ் கைதிகளுக்கும் சாம்பார் ருசியாக இருக்க வசதியாக பூண்டு, மிளகு முதலியவைகளை சப்ளை செய்யவேண்டும்.

எங்களை 'சி' வகுப்புக் கைதிகளாக நடத்துவதை நிறுத்தி அரசியல் கைதிகளாக நடத்த வேண்டும்.

## இந்திய ரயில்வேயும் சீன ரயில்வேயும் (1948--1952)

| | இந்தியா | சீனு |
|---|---|---|
| 1948-52க்கு இடையே கட்டப்பட்ட புதிய பாதைகள் | 365 மைல்கள் | 779 மைல்கள் |
| ரயில்வேயில் சம்பள விகிதம் (1952) | குறைந்த சம்பளம் ரூ. 70<br>உயர்ந்த சம்பளம் ரூ. 3500 | குறைந்த சம்பளம் ரூ. 150<br>உயர்ந்த சம்பளம் ரூ. 400 |
| குறைந்தபக்ஷ சம்பளத்திற்கும் உயர்ந்த பக்ஷ சம்பளத்திற்கும் உள்ள வித்தியாசம் | 1: 50 | 1: 3 |
| மொத்த ரயில்வே பாதையின் நீளம் (1952) | 34000 மைல்கள் | 14633 மைல்கள் |
| மொத்த சிப்பந்திகள் எண்ணிக்கை | 9,25,000 | 6,23,000 |
| குட்ஸ் ரயில் வண்டி தினசரி சராசரி ஓடும் மைல்கள் | 38·1 மைல்கள் 1950ல்<br>40·9 மைல்கள் 1952ல் | 69·5 மைல்கள் 1950ல்<br>145·8 மைல்கள் 1952ல் |
| குட்ஸ் வண்டியில் அனுப்பப்படும் பொருள்களின் நிறை | 461 டனகள் 1950ல்<br>487 டன்கள் 1952ல் | 1016 டன்கள் 1950ல்<br>1213 டன்கள் 1952ல் |

# எல்லா அரசியல் கைதிகளையும் விடுதலை செய்க!

## தூத்துக்குடியில் தோழர் பாலன் முழக்கம்

தூத்துக்குடியில் சுமார் 4½ ஆண்டுகளுக்கு பின் முதன் முதலாக நகர கம்யூனிஸ்ட் கட்சியின சார்பில் தோழர் எஸ்.ஏ. முருகானந்தம் தலைமையில் நடைபெற்ற மாபெரும் பொதுக்கூட்டத்தில் தோழர் பாலதண்டாயுதம் பேசினார்.

அப்பொழுது அவர் கூறியதாவது:

மக்களின் ஊழியர்களை மக்களுக்கு சேவை செய்ய விடாதபடி, சிறையில் பூட்டி வைத்து அவர்களை "அரசியல் கொலைகாரர்கள்" என்று கூறுகிறார் ராஜாஜி. ஆனால் அரசாங்கம் தான் அகிம்சா போர்வை போர்த்திக்கொண்டு மக்கள் மீது பலாத்காரத்தை பிரயோகித்தது. ராஜாஜியின் ஆட்சியில் எங்கும் பஞ்சம், பட்டினிச் சாவுகள், ஏற்பட்டு நாடு சுடுகாடாகிக் கொண்டிருக்கிறது.

சட்டசபைகளின் மூலம் மட்டும் சுபீட்சமடைந்து விடமுடியாது. பிரச்னைகளின் மீது வெளியில் நடைபெறும் போராட்டங்களினால்தான் தங்கள் கோரிக்கைகளை மக்கள் பெற முடியும். வெளியில் நடைபெறும் போராட்டங்களை சட்டசபையில் எடுத்துக்கூறி வாதாடவே கம்யூனிஸ்ட்கள் சட்டசபைகளில் அங்கம் வகிக்கின்றனர்.

உங்கள் ஏகோபித்த கிளர்ச்சியினால் சதி வழக்கில் ஈடுபடுத்தப்பட்டவர்கள் விடுதலையாகிக் கொண்டிருக்கிறார்கள். மற்றும் சகல அரசியல் கைதிகளையும் விடுதலை செய்ய வேண்டும். மக்கள் தங்கள் கோரிக்கைகளை பெற சகல முற்போக்கு சக்திகளைக்கொண்ட ஐக்கிய முன்னணி அமைத்துப் போராட வேண்டும் என்றார்.

மற்றும் நெல்லை சதிவழக்கில் 5-வருட தண்டனை பெற்று மதுரையிலிருந்து சமீபத்தில் நிபந்தனையின்றி விடுதலைபெற்ற எ. ராமசந்திரன், சிங்கை மீனாட்சிநாதன், அருணாசலம் முதலியவர்களும் பேசினர்.

தலைவர்களுக்கு பல தொழிற் சங்கங்களின் சார்பாக மலர்மாலை யணிவிக்கப்பட்டது. கூட்டத்தில் ரூ, 58—2—0 வசூல் செய்யப்பட்டது.

தி. மு. கழகத்தாரால் கேட்கப்பட்ட சில கேள்விகளுக்கு பாலதண்டாயுதமும், முருகானந்தமும் தக்க பதிலளித்தனர்.

டை கூட்டத்தில் ஹார்வி மில், தூத்துக்குடி மண் தோண்டிக் கப்பல் முதலியவைகளில் பழிவாங்கப்பட்ட தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்கவேண்டும், எல்லா அரசியல் கைதிகளையும் விடுதலை செய்யவேண்டும், சதி வழக்குகளை வாபஸ் வாங்க வேண்டும் முதலிய தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேறியது.

## அரசியல் கைதிகள் விடுதலைக் கிளர்ச்சி

சகல அரசியல் கைதிகளையும் விடுதலை செய்யக் கோரி 20-4-53ல் கோவில்பட்டியில் சமீபத்தில் விடுதலையான தோழர் பாலன், மீனாட்சிநாதனை வரவேற்க நடைபெற்ற கூட்டத்திலும், விருதுநகர் முனிசிபல் தொழிலாளர் சங்கத்தின் சார்பாக 26-4-53ல நடைபெற்ற ஆண்டுவிழாக் கூட்டத்திலும், 19-4-53ல் விக்கிரமசிங்கபுரத்தில் தோழர் பாலனை வரவேற்க நடைபெற்ற பொதுக்கூட்டத்திலும், வள்ளியூரில் 21-4-53ல் நடைபெற்ற 4000 பேர்கள் கொண்ட கூட்டத்திலும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## போலீஸ் அடக்குமுறையை விசாரணை செய்க!

தரங்கம்பாடியில் மீன்பிடிப் போர் வசிக்கும் ஆரிய நாட்டுத் தெருவில் 14-4-53ந் தேதி இரவு 7 மணி சுமாருக்கு நாகை சுங்க இலாக்கா டிப்டி சூப்ரண்டும், மற்றும் விசேஷ ஆயுதந் தரித்த போலீஸ் படையும் (SAP) புகுந்து, நிரபராதிகளான ஆண், பெண் தொழிலாளர்களைக் கண்டபடி அடித்து இம்சை செய்திருக்கிறார்கள். தரங்கம்பாடிக்கு அடுத்துள்ள குட்டியாண்டியூர் மீன்பிடித் தொழிலாளி ராமக்கண்ணு செட்டியாரையும் போலீஸ் தாக்கியிருக்கிறது. ஒரு சில கள்ளக் கடத்தல் (காரைக்காலுக்கு) பேர்வழிகளைப் பிடிப்பதற்காக வேண்டி, இப்படி ஊர் ஜனங்களையெல்லாம் போலீஸ் அடிப்பது அக்கிரமம். உடனடியாக இந்த சம்பவம் பற்றி சர்க்கார் விசாரணை செய்து, அதற்குக் காரணமாயிருந்த போலீஸ் அதிகாரிகளின்மீது நடவடிக்கை எடுக்கவேண்டும்.

## ஐக்கிய ஓட்டல் தொழிலாளர் வெற்றி

பொள்ளாச்சி ஜெனரல் லாட்ஜ் நிர்வாகம் தொழிலாளிகள் சங்கத்தில் சேர்ந்ததற்காக முக்கிய தொழிலாளிகளை பழிவாங்கும் எண்ணத்துடன் வெங்கடேச லாட்ஜ் என்று விலாசத்தை மாற்றி மூன்று தொழிலாளிகளை நீக்கிவிட்டார்கள்.

மேற்கண்ட விஷயமாகப் பேச்சுவார்த்தை நடந்து கொண்டிருக்கும்போது சோஷலிஸ்ட் தலைவர்கள் மல்லையன் பொன்னையன் வாங்கமுடியும் என்று சொல்லிக்கொடுத்து பேச்சுவார்த்தை முறித்துவிட ஏற்பாடு செய்தார்கள்.

உடனே கடையின் முன்பு மறியல் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது மூன்று தொழிலாளிகளும் மறியல் செய்தார்கள். போலீஸ் வந்து மூவரையும் அழைத்துச் சென்றார்கள். உடனே மில் தோட்டி வறுகடலை தொழிலாளிகள் மறியல் செய்தார்கள். நிர்வாகம் பணிந்துவந்து தொழிலாளிகளுக்கு மூன்றுமாத சம்பளம் கொடுக்க இசைந்தது.

★

## பொள்ளாச்சி சமாதானக் கமிட்டிக் கூட்டம்

19-4-53 மாலை 6 மணி அளவில் பொள்ளாச்சியில் சுப்பிரமணிய சுவாமி கோவில் மண்டபத்தில் உயர்திரு. பி. ஏ. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் தலைமையில் ஒரு கூட்டம் நடைபெற்றது. அது சமயம் கோவை ஜில்லா சமாதானக் கமிட்டித் தலைவர் திரு. சென்னப்ப கவுடர் அவர்களும் சமாதான இயக்கத்தின் தேவை பற்றியும் அதன் சாதனைகள் குறித்தும் விரிவாகப் பேசினர். பின்னர் 35 பேர்கள் கொண்ட ஒரு புதிய கமிட்டி அமைக்கப்பட்டது.

தலைவர்: திரு. டாக்டர் ஏ. சுப்பையன் அவர்கள் (முனிசிபல் கவுன்சிலர்). உபதலைவர்: திரு. ஏ. சி. எம். ஏ. பதுருதீன் அவர்கள் (முனிசிபல் கவுன்சிலர்). செயலாளர்: திருவாளர்கள் கே. சி. எஸ். அருணாசலம், ப. ரங்கசாமி (முனிசிபல் கவுன்சிலர்), பு. செந்தில்வேல் (முனிசிபல் கவுன்சிலர்). பொக்கிஷதார்: திரு. ஆர். அய்யாசாமி.

# அகில இந்திய மக்கள் நாடக மன்றத்தின்

## 7-வது மகாநாட்டின் அறிக்கை

## கலைஞர்களே, மக்கள் கலையை வளர்க்க வாரீர் !

நாடக, சினிமா எழுத்தாளர்களும் கலைஞர்களும் ஆகிய நாங்கள், பாடகர்களும் நடனக் கலைஞர்களுமாகிய நாங்கள், ஓவியர்களும் சங்கீத கலைஞர்களும் இதர நிபுணர்களுமாகிய நாங்கள், இந்த அகில இந்திய மக்கள் நாடக மன்ற 7வது மகாநாட்டில் எங்களை மக்களின் சேவைக்காக அர்ப்பணஞ் செய்கிறோம். மக்களின் வாழ்க்கை போராட்டங்கள் கனவுகள் இவைகளை பிரதிபலிக்கும் படைப்புகளை உண்டு பண்ணுவதென்றும், அவர்கள் சமாதானம் ஜனநாயகம் இவற்றிற்காக நடத்தும் முயற்சிகளை பிரதிபலிப்பதென்றும், சகலவித அநியாயங்களிலிருந்தும் விடுபட அவர்கள் செய்யும் முயற்சிகளை பிரதிபலிப்பதென்றும் உறுதிபூண்டுள்ளோம்.

### அர்ப்பணம்

நாங்கள் மக்களின் சந்தோஷத்தைப்பற்றியும் துயரத்தைப்பற்றியும் பாடுவதென்றும், யதார்த்த உண்மையை எடுத்துக்காட்டி அதன்மூலம் ஊக்கத்தை உண்டுபண்ணுவதென்றும், மக்களுக்கு சமாதானமான சுபீட்சமான வாழ்க்கையை அமைத்துத்தர பாடுபடுவதென்றும், அதன்மூலம் நமது செழிப்பான நாட்டில் ஏற்பட்டுள்ள கொடிய பட்டினியை போக்குவதென்றும் முடிவுசெய்துள்ளோம்.

### கலைஞர்கள் ஐக்கிய அணி

பல்வீனமான நாடுகளின் மக்கள்மீது தாக்கி அடிமைப் படுத்தவேண்டும், யுத்தம் ஏற்பட வேண்டுமென்னும் முறையில் மக்களுடைய எண்ணம் கெடும்படியாக பிரசாரம் செய்ய நிர்பந்தம் ஏற்பட்டு வரும் நிலையில் நாம் கூடியுள்ளோம். இது நம் மக்களுக்கும், பண்பாட்டிற்கும், சினிமா நாடகக் கலைக்கும் மிகுந்த ஆபத்தை ஆபத்தாகும். நம் கலையையும் இலக்கியத்தையும் இழிவுபடுத்தி பலாத்காரம் கொலைவெறி எண்ணங்களை பரப்பும் முயற்சிகள் நடைபெறுகின்றன. மக்களை யுத்தத்திற்கும், கொள்ளையடிப்பதற்கும், தீயிடுவதற்கும், குற்றம் புரிவதற்கும் தூண்டும் முயற்சிகள் செய்யப்படுகின்றன. இப்படிப்பட்ட தாக்குதலிலிருந்து கலையைப் பாதுகாக்க விரும்பும் சகல பண்பாடுள்ள மக்களும் ஒன்றுபட்டு பாடுபடவேண்டும். இந்த நிலைமையில் சகல நாடுகளும், சகல தேசங்களும் சமாதானமாகவும் நட்புறவுடனும் வாழவேண்டும் என்று எடுத்துக்காட்டும் பாடல்கள், நாடகங்கள் இயற்றப்பட வேண்டுமென்று மன்றம் அறைகூவி அழைக்கிறது.

### துயர்போக்கப் பாடுபடுவோம்

நம் நாட்டு மக்களின் பொருளாதார நிலைமை சீர்குலைந்து வரும் இந்த நேரத்தில் நகரங்களிலும் கிராமங்களிலும் உள்ள கலைஞர்களும் நாடக மன்றங்களும் தங்களுடைய வாழ்க்கையையே நடத்திக்கொண்டுபோக முடியாமல் இருக்கின்றனர். சினிமாக்களின் நிலையும் அப்படியே. சினிமா, நாடக தயாரிப்புச் செலவு, நாடக மேடைக்குத் தேவையான சாமான்களின் விலை அதிகரித்துள்ளது. இதனால் நாடகத்தையே தொழிலாகக் கொண்ட சமூகங்களும் அமெச்சூர் நாடக சபைகளும் மூட வேண்டிய நிலைமை ஏற்பட்டுள்ளது. ஆயிரக்கணக்கான நாடகக் கலைஞர்களும், சிப்பந்திகளும் வேலையின்றி திண்டாடுகின்றனர். நம்முடைய கலைகள் வளருவதற்காக எழுத்தாளர்கள், கலைஞர்கள், டெக்னீஷியன்களின் வாழ்க்கை வசதிமை உயர்த்துவதற்காக இடைவிடாது பாடுபடுவோம் என்று நாங்கள் உறுதி எடுக்கிறோம்.

நமது புராதன காவியங்கள், நாடகங்கள் நமக்கு அளிக்கும் ஆதர்சத்தையும், முன்னேற்ற மடைந்துள்ள நாடுகளின் அனுபவத்தையும் முன்நிறுத்தி உயர்ந்த கலா சிருஷ்டிகளை ஆக்க முன்வருவோம். உன்னதமான கலாரூபத்தைப் படைக்கவும், கருத்தையும், உருவத்தையும் அழகாகப் பிணைத்துப் பின்னி அற்புதமான கலா சிருஷ்டியாக்கிக் கூட்டுவதில் நாம் கவனம் செலுத்துவோம்.

நமது கலாச்சாரத்திற்கு, மலைஜாதி மக்கள் அளித்துள்ள பங்கை மனதிற்கொண்டு, அத்தகைய கலாச்சாரங்களை வளர்க்கவும், அவற்றின் ரூபங்களின ஜீவனையும், செழுமையையும் பாதுகாக்கவும் முற்படுவோம்.

### கொலைஞர்களை எதிர்ப்போம்

இரண்டாவது உலக யுத்த காலத்தில் எழுந்த விடுதலை இயக்கத்திலிருந்து பிறந்ததாகும் நமது மக்கள் நாடக மன்றம்; எங்கெங்கு அநீதிகளும், அடக்குமுறைகளும் எந்தெந்த விதமாக நடப்பினும், அவற்றை நாம் உறுதியாக எதிர்த்து நிற்போம். நமது மக்களின ஆர்வ அபிலாஷைகளையும், ஆசைக் கனவுகளையும் ஒடுக்க அல்லது ஒழிக்க நினைப்பவர்களது முயற்சிகளையும், செல்லரித்துப்போன காலத்தின் ஓட்டைக் கொள்கைகளை மக்கள் மனதிலே திணித்துக் குழப்பமூட்ட நினைப்பவர்களின் சகல சட்ட திட்டங்களையும் நாங்கள் வன்மையாக எதிர்க்கின்றோம்.

### தேசிய இனங்கள் மலரட்டும்

இந்தியாவிலுள்ள பல்வேறு தேசிய இனங்களும், தத்தம் மொழிகளையும், கலாச்சாரங்களையும் வளர்க்கவும், அவர்களது நாடகம், கிராமியக்கலை, இலக்கியம் ஆகியவற்றை அபிவிருத்தி செய்யவும் சகல வசதிகளும் அளிக்கவேண்டுமென்று நாங்கள் வற்புறுத்துகின்றோம். ஒவ்வொரு தேசிய இனமும், அதன் தேசிய உருவத்தில், அதன் சொந்த மொழியில்தான தனது அபிலாஷையை வெளிபடுத்த முடியும் என்று நாங்கள் பிரகடனப்படுத்துகின்றோம். தேசியம் என்ற பெயரால், தேசிய உணர்வு என்ற பெயரால் செய்யப்படும் முயற்சிகளையும், ஒரு இனத்தின்மீது, அதன் தாய்மொழியை விடுத்து, இதர ஒரு மொழியைத் திணிக்க முற்படுவதையும் நாம் வன்மையாக எதிர்த்து நிற்போம்.

சமூக யதார்த்தங்களை மக்கள் புரிந்துகொள்ளாமல் மறைப்பதற்கான பத்தாம்பசலிக் கருத்துக்களையும், சகோதரச் சண்டையையும் மூட்டிவிடும் முடைநாற்றக் கருத்துக்களையும் நாங்கள் அறவே இகழ்ந்து ஒதுக்குகின்றோம். நாங்கள் வகுப்பு வாதிகளையும், நிறவெறியை உண்டு பண்ணுபவர்களையும், ஜாதி வித்தியாசங்கள் தொடர்ந்து இருக்கவேண்டும் என்பவர்களையும் எதிர்க்கிறோம். நாங்கள மூட நம்பிக்கை, பயம் இவற்றிற்கு எதிராக நிற்கிறோம். மனிதன் தன விருப்பப்படி வாழ்க்கையை அமைத்துக்கொள்ள முடியும் என்பதை நாங்கள நம்புகிறோம்.

### கலைச்சம்பத்தை மேலும் வளர்ப்போம்

நமது அருமை நாட்டின் அளவற்ற கலைச்சம்பத்தை மேலும் வளர்க்க, இந்தியாவின் எழுத்தாளர்களும், நடிகர்களும் முன்வரும்படி அழைக்கின்றோம். நமது மாபெரும் புலவர்கள், பாடகர்கள், நடனமணிகள், இசைவாணர்கள், நமது மக்களின் ஆழ்ந்த அபிலாஷைகளையே எப்பொழுதும் பிரதிபலித்தார்கள், அதுபோலவே, இன்றைய எழுத்தாளர்களும், நடிகர்களும் மக்கள் வாழ்வில் ஏற்படும் மாற்றங்களை நன்கு கற்றறிதல் வேண்டும்; அவர்களது புராதன, புதுமை கலைரூபங்களை அறிந்து உணர்தல் வேண்டும்; அவர்களது சொந்தமானதும், ஒட்டுமொத்தமானதுமான தோல்விகளையும், வெற்றிகளையும் கண்டு தெளிதல்வேண்டும் என வற்புறுத்துகின்றோம். மக்கள் வாழ்வில் கலந்து நின்றால், உருவத்திற்கும் உள்ளடக்கத்திற்கும் இடையேயுள்ள செயற்கை முரண்பாடுகளைக் களைந்தெறியும், வெறும் உருவவாதத்திற்கு வித்திடும்படியான போலிக் கருத்துக்களையும், எண்ணங்களையும் அகற்றிவிடவும் முடியும் என்று அனுபவம் நமக்கு எடுத்துக்காட்டுகிறது. கலைஞனின் உணர்வும், யதார்த்தமும் இரண்டறக் கலந்து, கலைஞனின் ஆதர்சத்திலிருந்து உதயமாகும் கலை ஒரு சிறப்புத்தன்மையைப் பெற்று விளங்குகின்றது.

இந்திய நாடகக் கலைபற்றிய மிகப் புராதனமான நூலாகிய பரத நாட்டிய சாஸ்திரம் கூறுகின்றபடி, நாடகக்கலைகள், பலரது கூட்டு முயற்சியால் பரிணமிக்கும் ஒரு கலைக்கோவையாகும், என்று நாங்கள் கருதுகின்றோம். மிகப் பழங்காலந்தொட்டு நமக்கு சிருஷ்டித்துக் கொடுக்கப்பட்டுள்ள பெரும் கலா சிருஷ்டிகள் இவற்றிற்கு எடுத்துக்காட்டுகளாகும்.

### கலைஞர்கள் கடமை

கலையும் இலக்கியமும், பாட்டும் ஆட்டமும், நாடகமும் கவிதையும் மக்களின் சதையும் ரத்தமும் போன்றதாகும்; பஞ்சத்திலும், சுபீட்சத்திலும், யுத்தத்திலும், சமாதானத்திலும், அழிவிலும், அமைதியிலும் மக்களின் தோன்றாத் துணைவன். புதுமை நிறைந்த ஆர்வம் ஊட்டி, உணர்ச்சியை முறுக்கேற்றும் கலாசிருஷ்டிகளை உண்டாக்கித் தரும்படி எழுத்தாளர்களையும், கலைஞர்களையும் இந்திய மக்கள் ஆவலோடு எதிர்பார்க்கின்றனர்.

### சகோதர கலைஞர்களுக்கு

நாடு முழுவதிலுமுள்ள பொழுதுபோக்கு, தொழிலுக்காக நடத்தும் நாடக மன்றங்களைச் சேர்ந்தவர்கள் ஆற்றியுள்ள நற்பணிக்காக, சகல இன்னல்களுக்குமிடையே இந்திய நாடகக்கலையை வளர்த்து வருவதற்காக அவர்களை நன்றி உணர்வுடன் பாராட்டுகின்றோம். எங்கள் நேசக்கரத்தை அவர்களிடம் நீட்டுகின்றோம்; ஒரு உண்மையான மக்கள் நாடக இயக்கத்தைக் கட்டி வளர்க்க எங்களோடு ஒத்துழைக்க வாரீர் என்று அவர்களை அறைகூவி அழைக்கின்றோம்.

### அறைகூவல்

கலாபிமானிகளே! புதிய புதிய செழுமையான, இந்திய பரம்பரைக்கேற்ற கலையைச் சிருஷ்டிக்க முனைபவர்களே! நமது மக்கள் வறுமை, பட்டினியிலிருந்து விடுபட்டு, சுபீட்சமும், இன்பமும்பெற்று வாழவிரும்புகின்ற அன்பர்களே! உங்களுக்கு நாங்கள் விடுக்கும் அறைகூவல் இதுதான!

மக்கள் கலாச்சாரத்தை சிருஷ்டித்து வளர்க்க எங்களோடு சேர்ந்து நிற்கவாரீர்!

இந்திய மக்களின் பேரொலிகள் அமரகீதமாக இசை பரப்பட்டும்!

# ரயில்வேத் தொழிலாளர் முன்னுள்ள கடமைகள்

## 'கிராஸ் ரோட்ஸ்' தலையங்கம்

அகில இந்திய ரயில்வேத் தொழிலாளர் சம்மேளனமும, இந்தியதேசியரயில்வேதொழிலாளர் சம்மேளனமும் ஒன்று சேர்ந்து ஒரே மத்திய சங்கமாக அமைவது என்று முடிவு செய்துள்ளன. இந்திய ரயில்வேத் தொழிலாளர் இயக்கத்தில் இது மிக முக்கியத்துவம் வாய்ந்த சம்பவமாகும்.

இந்திய ரயில்வேத் தொழிலாளிகள் அகில இந்திய ரயில்வேத் தொழிலாலாளர் சம்மேளனத்தை பலம் பொருந்திய போராட்ட ஸ்தாபனமாக கட்டினார்கள். வீரமிக்க பலவருட போராட்டங்களின் விளைவாக அது இந்திய ரயில்வேத் தொழிலாளிகளின் ஒற்றுமையின் சின்னமாக உருவாகியது பெரிய பெரிய ரயில்வேத் தொழிலாளர் ஸ்தாபனங்கள் அதனுடன் இணைக்கப்படுவதின மூலமாகவும் தொழிலாளிகளின உணர்வு, போதம் உறுதி வளருவதன் மூலமாகவும் வருடா வருடம் அதன பலம் அதிகரித்தது. இந்த மாதிரி ஸ்தாபன ரீதியான ஒன்றுபட்ட சக்தியின காரணமாகத்தான் ரயில்வே தொழிலாளிகள் சர்க்காரையும், ரயில்வே போர்டையும் எதிர்த்து கோரிக்கைகளை அடையமுடிந்தது.

ஆனால் 1948க்குப் பிறகு தலைமைப் பதவியின் சில பகுதியினரின் செயல்களின காரணமாக ஆட்சியாளர்கள் சதி செய்து ரயில்வேத் தொழிலாளர் இயக்கத்தை பிளவுபடுத்த முடிந்தது. ஒவ்வொரு ரயில்வேயிலும் தனக்குத் தனக்கு என்று தனியான இணைக்கப்பட்ட சங்கங்கள் கொண்ட இரு போட்டி மத்திய சம்மேளனங்கள் இருப்பதினாலும், பல்லாயிரக்கணக்கான அங்கத்தினர்களை தன்னுள்ளடக்கிய தென் இந்திய ரயில்வே லேபர் யூனியன போன்ற பெரும் போராட்ட ஸ்தாபனங்கள் நீக்கப்பட்டதாலும ரயில்வேத் தொழிலாளிகள் வெகுவாக பாதிக்கப்பட்டனர்.

இந்த பலவீனத்தை ரயில்வேத் தொழிலாளர் சங்கங்களின அங்கத்தினர் எண்ணிக்கை குறைந்ததிலிருந்தும், அவைகளின் பொதுஜன சேவைகள் தடைபட்டிருப்பதிலிருந்தும் பார்க்கலாம். எந்த அளவிற்கு ரயில்வேத் தொழிலாளர் இயக்கம் பலவீனப்பட்டிருக்கிறது என்பதை பிளவு ஏற்படுவதற்குமுன்னலுள்ள காலகட்டத்தையும், அப்போது நடைபெற்ற மகத்தான போராட்டங்களையும் ஞாபகப் படுத்தி கடந்த 3 வருட காலமாக இருந்துவரும் தேக்கத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நனகு விளங்கும்.

இவைகளின் காரணமாக ரயில்வே போர்ட் தொழிலாளிகளைத் தாக்கி பலவீனப்படுத்தவே வசதியாக இருந்துள்ளது.

இந்த நிலைமையில், இரு மத்திய சம்மேளனங்களை ஒன்றாக இணைக்க எடுக்கப்பட்டுள்ள தீர்மானம், ரயில்வேத் தொழிலாளிகள் மீண்டும் ஒரு ஒன்றுபட்ட அகில இந்திய ஸ்தாபனத்தை உருவாக்குவதற்கும், ரயில்வே போர்ட், சர்க்காரின் தாக்குதல்களை முறியடிப்பதற்கும், ரயில்வே தொழிலாளிகளின் நலன்களைப் பாதுகாப்பதற்கும் சரியான சூழ்நிலைமையை உண்டுபண்ணியுள்ளது.

ஆனால் ஒன்றுபட்ட ஸ்தாபனங்கள் தானாகவே ரயில்வேத் தொழிலாளிகளின் கோரிக்கைகளை அடையவும், பாதுகாக்கவும் தகுந்த ஸ்தாபனம் ஆகிவிடுமென்று சொல்ல முடியாது. இதைச் சாத்தியமாக்குவதற்கு சகல ரயில்வேத் தொழிலாளிகளும் தங்கள் தங்கள் யூனியன்களில் ஆயிரக்கணக்கில் சேர்ந்து அவைகளின வேலைகளில் தீவிரமான பங்குகொள்ளவேண்டும்; உரிமைகளைப் பாதுகாக்க போராட முன்வரவேண்டும்.

தொழிலாளிகளிடத்தில் ஏற்பட்டுள்ள ஒற்றுமை ஆர்வமும், அவர்கள தங்கள் வாழ்க்கையில் அனுபவிக்கும் நெருக்கடியும் எப்படி இரு சம்மேளனங்களும் ஒன்றாக இணைவதற்கு தூண்டுகோலாக இருந்ததோ அதேபோன்று உண்மையான பரந்த ஒற்றுமையை ஏற்படுத்துவதற்கும், ஐக்கியப்பட்ட ஸ்தாபனத்தின் தலைமையை கோரிக்கைகளுக்காக போராட்டப் பாதையைக் கடைப்பிடிக்கும்படி செய்வதற்கும் ரயில்வேத் தொழிலாளிகள் அனைவரும் சங்க நடவடிக்கைகளில் பங்குகொள்வதுடன் பரந்த போராட்டங்களில் ஈடுபடவேண்டும்.

ஆகவே சகல ரயில்வேத் தொழிலாளர்களும், சகல ஸ்தல தொழிற்சங்க அமைப்பாளர்களும், சகல தொழிற்சங்க தலைவர்களும் சகல ரயில்வேத் தொழிலாளிகளையும் சங்க அங்கத்தினர்களாக ஆக்குவதற்கு பாடுபடவேண்டும். ஐக்கியப்பட்ட ஸ்தாபனம் தொழிலாளிகளின் உடனடியான கோரிக்கைகளை வகுக்க வேண்டும். இந்தக் கோரிக்கைகளின் அடிப்படையிலும், ஆட்குறைப்பு, சம்பளவெட்டு, வேலையில்லாத் திண்டாட்டத்தை எதிர்க்கும் அடிப்படையிலும் பரந்த ரயில்வே தொழிலாளிகளை ஒன்றுதிரட்ட வேண்டும். ஐக்கியப்பட்ட இந்த ஸ்தாபனம ஒற்றுமையை மேலும் பலப்படுத்துவதற்காக பல்லாயிரக்கணக்கான அங்கத்தினர்களையும், பரந்த செல்வாக்கையும்சிறந்த ஊழியர்களையும் கொண்ட தென்னிந்திய ரயில்வே லேபர் யூனியனையும் தனனோடு சேர்த்துக்கொள்ளவேண்டும். சகலரும் இந்த ஜீவாதாரமான காரியத்தைச் சாதிக்க உதவவேண்டும்.

தொழிலாளி வர்க்கத்தையும், தேசியப் பொருளாதாரத்தையும எதிர்நோக்கியிருக்கும் புதிய நெருக்கடியை இவ்வாறு செய்வதன்மூலமாகத்தான பல சமயங்களில் சரித்திரத்தில் தனனுடைய பிற்போக்கான தலைமையை திகதுமுக்காடச்செய்து மகத்தானபோராட்டங்களை நடத்தி தடைகளை சுக்கு நூறாக உடைத்து வெற்றிபெற்ற ரயில்வேத் தொழிலாளிவர்க்கம் தன்னுடைய பங்கை நிறைவேற்றமுடியும்.

# நிலப் பிரபுத்வத்தை ஒழிப்போம்: நிலமற்றோ[...]

## அ. இ. கிசான் சபை மகாநாட்டில் 2 லட்சம் ஜனத்திரள்

**அகில இந்திய கிசான் சபாவின் 11-வது மகாநாடு கண்ணனூர் கய்யூர் நகரில் ஏப்ரல் 22 முதல் 27ந்தேதி வரை நடைபெற்றது. மகாநாட்டின் பொதுசபையில் 2 லட்சம் பேர் திரண்டிருந்தனர். 10,000 பேர் கொண்ட பிரம்மாண்டமான ஊர்வலம் நடைபெற்றது.**

64 அடி உயரமுள்ள கம்பீரமான கொடி மரத்தில் பாபா குருமுக் சிங் செங்கொடியேற்றினர். "புரட்சி ஓங்குக", "இங்கிலாப் ஜிந்தாபாத்!" எனும் கோஷங்கள் இடி முழங்கின. பின்னர் 85 வயது நிரம்பிய இந்தப் புரட்சி வீரருக்கு முன்னால், 1,000 செஞ்சட்டை வீரர்கள் அணி வகுத்துச் சென்று வணக்கம் செலுத்தினர்.

இந்தியா பூராவிலிருந்தும் இந்த மகாநாட்டிற்கு 600 பிரதிநிதிகள் வந்திருந்தனர். தமிழ்நாட்டிலிருந்து தோழர்கள் பி. ஸ்ரீனிவாச ராவ், மணலி கந்தசாமி, மீரான், அண்ணங்கார், ராமராஜ், சிவகுருநாத பிள்ளை, எம். ஆர். வெங்கட்ராமன், கே. டி. ராஜு, பி. எம். சுப்ரமணியம் முதலிய சுமார் 30 பிரதிநிதிகள் அகில இந்திய கிசான் மகாநாட்டில் கலந்துகொண்டனர். சகோதரப் பிரதிநிதிகளும், பார்வையாளரும் சேர்த்து மொத்தம் தமிழ் நாட்டிலிருந்து சுமார் 52 பேர்கள் மகாநாட்டிற்குச் சென்றனர். ஆறு வருடங்களுக்குப் பின்னர் நடைபெறும் இந்த சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த மகாநாடு பல பிரச்சினைகளைப் பற்றி தீர்க்கமாக விவாதித்தது. நிலப் பிரபுத்துவத்தை ஒழிக்கவேண்டும், நிலமில்லாத விவசாயிகளுக்கு நிலத்தை இனமாகப் பங்கு பிரித்துக் கொடுக்க வேண்டுமென்று மகாநாடு கோஷித்தது.

### பிரிட்டிஷ் மூலதனத்தை பறிமுதல் செய்

பிரிட்டிஷ் காமன்வெல்த்திலிருந்து பரிபூரணமாக இந்தியா விலகுவதற்காகவும், நம் நாட்டிலுள்ள பிரிட்டிஷ் மூலதனத்தை பறிமுதல் செய்வதற்காகவும் எல்லா தேசங்களுடனும் சுதந்திரமாக சம உரிமையில் வியாபார கலாச்சார உறவுகளை ஏற்படுத்திக் கொள்வதற்காகவும், யுத்தத்திற்கு எதிராக உறுதியான சமாதானக் கொள்கையைக் கடைப்பிடிப்பதற்காகவும், ஆசிய மண்ணிலிருந்து எல்லா அன்னியத் துருப்புகளையும் வெளியேற்றுவதற்காகவும் தீவிரமாகப் போராடுவதென இந்த மகாநாடு சபதமேற்றது.

ஏகாதிபத்திய நிலப்பிரபுத்துவத்தை எதிர்த்துப் போராடியதற்காக 1943, மார்ச் 29ம் தேதியன்று அபுபக்கர், குஞ்சம்பு நாயர், சிறுக்கண்டன், அப்பு எனும் நான்கு கய்யூர் தோழர்கள் பிரிட்டிஷ் கொலைகாரர்களால் தூக்கிலிடப்பட்டனர். இந்த நான்கு விவசாயத் தியாகிகளின் நினைவுச் சின்னமாக அமைக்கப்பட்ட கய்யூர் நகரில்தான் மகாநாடு நடைபெற்றது. ஆயிரக்கணக்கான விவசாயிகள் ஒவ்வொரு நாளும் தியாகிகளின் ஞாபகச் சின்னத்தின் முன் கூடினர். "நிலம், உணவு, விடுதலை, சமாதானம் பெறுவதற்காக உயிர்நீத்த தியாகிகளின் புனிதமான நினைவிற்காக" என்று பொறிக்கப்பட்டுள்ள அந்த சின்னத்தின்முன் தலை குனிந்து மௌனமாக வணக்கம் செலுத்தினர். மகாநாடு ஆரம்பமான ஏப்ரல் 22ம் தேதியன்று அகில இந்திய கிசான சபாவின் தலைவர் திரு. இந்துலால் யாக்னிக் தியாகிகள் சின்னத்திற்கு மாலையிட்டு வணங்கினர்.

### ஜன சமுத்திரம்

கய்யூர் நகர் ஜனசமுத்திரமாக விளங்குகிற்று. சமாதான வாசல், கய்யூர் வாசல், கிசான் வாசல் என்ற மூன்று வாசல்களின் மூலமாகவும் ஆயிரக்கணக்கான மக்கள் வருவதும், போவதுமாக இருந்தனர். மகாநாட்டின் தயாரிப்பு வேலைகள் ஜரூராக நடைபெற்றன. நூற்றுக்கணக்கான கூட்டங்களும், ஆர்ப்பாட்ட ஊர்வலங்களும் மலபார் பூராவும் நடத்தப்பட்டன. மகாநாட்டின் முக்கியத்துவமும், அதன் முன்னுள்ள கடமைகளும் மக்களுக்கு விளக்கப்பட்டன. கேரளாவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் மக்கள் சாரி சாரியாக மகாநாடு நோக்கிப் புறப்பட்டு வந்தனர்.

நேற்றுவரை போலீஸ் மைதானமாக இருந்த இடம் இன்று வீரம் செறிந்த இந்திய விவசாயிகளின் மகாநாடு நடக்கும் இடமாக மாறியது. கய்யூர் நகரில் டெலிபோன் வைக்கப்பட்டது. தபால் தந்தி ஆபீசுகளும் திறக்கப்பட்டன. இந்திய சர்க்காரின் செய்திப் பட இலாக்கா மகாநாட்டு நடவடிக்கைகளைப் படமெடுக்க வந்திருந்தது. பிரம்மாண்டமான மக்கள் இயக்கத்தை அதிகார பூர்வமாக சர்க்கார் படம் எடுக்க முன்வந்தது இதுதான் முதல் தடவையாகும்.

மகாநாட்டிற்கு வேண்டிய அரிசி, காய்கறி முதலிய உணவுப் பொருள்களை விவசாயிகள் இனமாகக் கொடுத்தனர். ஆயிரக்கணக்கான தேங்காய்கள் வந்து குவிந்தன. மகாநாட்டிற்குத் தண்ணீர் சப்ளை செய்வதற்காக மோட்டார் லாரிகள் இரவும் பகலும் வேலை செய்தன.

### விவசாய பொருள்களுக்கு நியாயவிலை

தேசியத் தொழில்களுக்கும், வர்த்தகம் விவசாயத்திற்கும் பாதுகாப்பளிக்க வேண்டுமென்று ஏப்ரல் 24-ந் தேதியன்று நடைபெற்ற பிரதிநிதிகள் கூட்டம் கோரியது. விவசாய உற்பத்தி பண்டங்களுக்கு நியாயமான விலை நிர்ணயிக்க வேண்டுமென்றும், விவசாயிகளுக்கு இதர பல சலுகைகளும் அளிக்கவேண்டுமென்றும் பிரதிநிதிகள் கூட்டம் கோரியது.

நிலத்திலிருந்து விவசாயிகளை வெளியேற்றுவதை எதிர்த்தும், புதிய வரிகளை எதிர்த்தும், குத்தகைக் குறைப்பிற்காகவும் ஒன்றுபட்டுப் போராட்டங்களை நடத்துவதற்காக இதர எல்லா விவசாய ஸ்தாபனங்களையும், அரசியல் கட்சிகளையும் அகில இந்திய கிசான் சபா அறைகூவி அழைத்தது. ஐந்து வருட திட்டத்தின் போலித் தன்மையை அது அம்பலப்படுத்தியது. இதன்மூலம் எப்படி மேலும் தொழில் நெருக்கடியும், விவசாய நெருக்கடியும் தீவிரமாகும் என்று அது எடுத்துக்காட்டியது.

கிசான் சபாவின் கூட்டுக் காரியதரிசியான தோழர் ஈ. எம். எஸ். நம்பூதிரிபாட் கொள்கை அறிக்கையை மகாநாட்டில் சமர்ப்பித்தார். பிரதிநிதிகளால் கொண்டு வரப்பட்ட திருத்தங்களையும் சேர்த்து கொள்கை அறிக்கையை மீண்டும் வரையறுத்து மகாநாட்டில் ஒரு உபகமிட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது.

நிலத்திற்காகவும், சுதந்திரத்திற்காகவும் விவசாய மக்கள் அனைவரையும் ஒன்றுபடுத்து வதே கிசான் சபாவின் முன்னுள்ள பிரதானமான கடமை யென்று தோழர் நம்பூதிரிபாட் கொள்கையறிக்கையை சமர்ப்பித்துப் பேசுகையில் குறிப்பிட்டார்.

### காமன்வெல்திலிருந்து வெளியேறு

இந்தியப் பொருளாதாரம் உள்நாட்டு, வெளிநாட்டு சுரண்டல்காரர்களின் செல்வாக்கு, ஆதிக்கத்தின் கீழ் இன்னும் இருப்பதாக அவர் கூறினார். இந்தப் பொருளாதாரத்தில் விவசாய உறவுகள்தான் கேந்திரமான பிரச்னையாகும். பிரிட்டிஷ் காமன்வெல்த்துடன் இருக்கும் எல்லா உறவுகளையும் துண்டிப்பதன் மூலம், எல்லா நாடுகளுடனும் சுதந்திரமாக சமத்துவ அடிப்படையில் வியாபார, கலாச்சார உறவுகளை ஏற்படுத்திக் கொள்ளுவதின் மூலமும் நம் தேசத்தை[...]

# பிரிட்டிஷ் ராணி முடிசூட்டு விழாவில்[...]

## இந்த தேசீய அவமானத்தை உடனே தடுக்க[...]

**லண்டன் நகரில் ஜுன் 20-ல் இங்கிலாந்து, அதன் அடிமை நாடுகளின் ராணியான எலிசெபத்தின் முடிசூட்டு விழா வைபவம் நடைபெறும். பிரிட்டிஷ் ராணிக்கு - சக்கரவர்த்தினிக்கு மரியாதை செலுத்துவதற்காக அன்று சகல டொமினியன்களின் சர்க்கார் தலைவர்களும் வைபவத்தில் கலந்துகொள்வார்கள்.**

"சுதந்திர ஜனநாயக இந்தியா"வின் பிரதமர் பண்டித நேருவும் அந்த வைபவத்தில் கலந்துகொள்வார். கடந்த 200 வருடங்களுக்கு மேலாக நம்மை அடிமைப்படுத்தி ஆண்ட அந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து எந்த மக்கள் கடந்த நூறு வருடமாக போராடி வருகிறார்களோ அந்த மக்களின சார்பில் அவர் செல்கிறார்.

பாராளுமன்றத்தில் ஏப்ரல் 8-ல் பண்டித நேரு பின்வருமாறு சொன்னார்:

"இந்தியா குடியரசான பிறகு காமன்வெல்த்தில் இருப்பது நல்லது மட்டுமல்ல; தேசங்கள் ஒன்றுக்கொன்று கொஞ்சமும் கட்டுப்படாமல் எப்படி இருக்க முடியும் என்பதற்கு இது நல்ல உதாரணமாகும்."

ஆனால், 23 வருடங்களுக்கு முன்பு நேரு லாகூர் காங்கிரஸ் மகாநாட்டில் தனனுடைய தலைமை உரையில் வேறுவிதமாகச் சொன்னார். அன்று அவருடைய தலைமையில் கூடிய காங்கிரஸ் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துடன கொண்டுள்ள சகல உறவையும் ரத்து செய்து கொள்ள வேண்டும் நம் நாடு பூரண சுதந்திர நாடாக இருக்கவேண்டும் என்று முடிவு செய்தது. அந்த வருடத்திலிருந்து இந்திய மக்கள் ஜனவரி 26ல பூரண சுதந்திரம் அடைந்தே தீருவோம் என்ற பிரதிக்ஞையை எடுத்து வருகிறார்கள்.

ஆனால், இது சுதந்திரம் அடையும் வரைக்கும்தான் பொருந்துமே தவிர அதற்குப் பிறகு பொருந்தாது, சுதந்திரம் அடைந்த பிறகு நிலைமை மாறிவிட்டது என்று சொல்லலாம்.

### சுதந்திரமும், காமன் வெல்த்தும்

ஆனால் அன்று நேரு காமன்வெல்த் தொடர்புக்கும் நம்முடைய சுதந்திரத்திற்கும் ஒத்துவராது என்று வாதாடினார். அவர் 1929 லாகூர் காங்கிரஸ் மகாநாட்டில் பின்வருமாறு கூறினார்:

"சுதந்திரம் அடைந்த பிறகு இந்தியா உலகத்தோடு ஒத்துழைப்பை ஏற்படுத்திக்கொள்ளவும் கூட்டாட்சியை ஏற்படுத்திக்கொள்ளவும் செய்யப்படும் முயற்சிகளை வரவேற்கும். சுதந்திரத்தின் ஒரு பகுதியை தான் சமத்துவமான உறுப்பினராக உள்ள பெரிய குழுவிற்கு விட்டுக்கொடுக்க முன்வரும்.

"ஆனால் இன்று பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் அப்படிப் பட்ட குழு அல்ல; கோடானுகோடி மக்களை அடிமைப்படுத்தி வைத்திருக்கும் வரை, உலகப் பரப்பளவில் ஏராளமான பிரதேசத்தை மக்களுக்கு விரோதமாக அடக்கி ஒடுக்கி வைத்திருக்கும்வரை அப்படிப்பட்டதாக அது இருக்க முடியாது. ஏகாதிபத்திய நோக்கம், மற்ற பிறத்தவர்களை சுரண்டும் நோக்கம் இருக்கும்வரை அதை உண்மையான காமன்வெல்த் என்று கூறமுடியாது. ஏகாதிபத்தியமும், அதனுள் உள்ளடங்கியுள்ள தன்மைகளும் ஒழிக்கப்

**பி. ராமமூர்த்தி**

படாவிட்டால், இந்தியா காமன்வெல்த்தில் சமத்துவமான உறுப்பினராக இருக்க முடியாது. இதுசெய்யப்படாத வரை இந்தியா சாம்ராஜ்யத்திற்குள் அடிமைப்பட்டுத்தான இடக்கும்; சுரண்டுதல் தொடர்ந்து நடைபெறும்."

மக்களுடைய விருப்பத்திற்கு விரோதமாக பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் கோடானுகோடி மக்களை சுரண்டவில்லை யென்றோ, ஏராளமான நாடுகளை அடிமைப்படுத்தி வைத்திருக்கவில்லை என்றோ நேருவால் கூறமுடியுமா? மலேய மக்கள், கென்ய மக்கள், தென்னாப்பிரிக்க மக்கள், மற்ற அடிமை நாடுகளிலுள்ள மக்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நடத்தி வரும் போராட்டம் அவர்கள் சுரண்டுகிறார்கள் என்பதற்கு சரியான எடுத்துக்காட்டுகளல்லவா? அப்படியானல் நாம் எங்கே சமபங்காளியாயிருக்கிறோம்? பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் மலேய வீரர்கள் கொலை செய்வதற்கும் கென்ய தேசபக்தர்களை வேட்டையாடுவதற்கும் இந்திய மக்கள் உடந்தையாயிருக்கிறார்கள் என்று நேரு நினைக்கிறாரா?

### நேருவின் பட்டுத்திரை

பண்டித நேரு, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் நம் நாட்டை சுரண்டுவதை பட்டுத்திரை போட்டு மறைக்கலாம். ஆனால் உண்மை நிலைமை அவருடைய பட்டுத்திரையை கிழித்தெறிகிறது. நேரு 23 வருடங்களுக்கு முன்பு சொன்னதை இன்றும் உண்மை என்று நிரூபிக்கிறது.

இது செய்யப்படாதவரை சாம்ராஜ்யத்திற்குள் இந்தியாவின் நிலைமை அடிமைப்பட்டதாகவே, இருக்கும். சுரண்டல் தொடர்ந்து நடைபெறும், என்று நேரு அன்று சொன்னார். நேரு அந்த பிரசங்கத்தில், "அயர் காங்கிரஸ் மகாநாடு இந்தக் கடமைகளை (ஏகாதிபத்தியத்தால் திணிக்கப்பட்டது) ஒப்புக்கொள்ள மறுக்கிறது; நாம் அவைகளை ஊர்ஜிதப்படுத்தி அதற்காகப் பாடுபடவேண்டும்."

ஆனால் இன்று அதே காமன்வெல்த்தைப்பற்றி புகழ்மாலை சூட்டுகிறார். இந்திய மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதியை காற்றில் விட்டுவிட்டார். இதன் பலனென்ன? பிரிட்டிஷார் நமக்குத் தர வேண்டிய 600 கோடிரூபாயை ஏப்பம் விட்டுவிட்டனர். நம் நாட்டின் ஏழை பாட்டாளி விவசாயி மக்களின் உழைப்பின் பலன் பறிபோய்விட்டது.

### பிரிட்டிஷ் நலனை நாம் பாதுகாக்க வேண்டுமாம்

இன்று நாம் எதிர்நோக்கியிருக்கும் பிரச்னைகள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகளால் திணிக்கப்பட்ட பிரச்னைகள். பிரிட்டிஷ் மூலதனம் நம் மீது திணிக்கப்பட்டுள்ளது. நாம் அவற்றை பாதுகாக்க வேண்டுமாம்!

காமன்[...] உறவு [...] இந்திய[...]டும் பிரிட்டிஷ்[...] பிடிப் பை தளர்[...]றதா? இல்லை. [...] இன்றும் பிரிட்டிஷ் [...]ல்களிமட்டும் நம் நாட்டிலிருந்து ரூ. 40 கோடியை வருடா வருடம் லாபமாக [...] கொண்டு போகின்றனர். கப்பல் கம்பெனிகளும், இன்சூரன்ஸ் கம்பெனிகளும் நம்முடைய அன்னியநாட்டு

## புரட்சி

[சர்தார் கே. எம். பணிக்கர்]

பண்டைப் பிரயாணிஉமை லண்டன் நகரத்தில்
முன்னம் ஒருதடவை முதலில் பார்த்ததுண்டு
கந்தை ஆடையுடன் கடும்பசி துணையாக
சிந்தை மிகநொந்து களிப்புச் சிறிதுமின்றி
எலும்பு உடம்பாக ஏங்கித் துரும்பாக
நின்றீர் தனியாக நீண்ட பெருமூச்சாய்.
அன்பாய் அணைப்பதற்கு அமைந்த ஆளில்லை,
உலகம் ஒருபோதும் உம்மை மதித்ததில்லை;
யாரும் உம்நிலைமை ஏனென்று கேட்கவில்லை,
சொந்த சுயநலமே சுவர்க்க சுகமென்று.

*　　*　　*

மற்றோர்நாள் உம்மை மன்னிய குட்டநாட்டில்
பொன்னிற நெற்கதிர்கள் பொலிந்து கலகலக்கும்
அந்தி வேளையிலே மந்தை வெளியினிலே
ஏறை ஹரிஜன் எழுப்பிய குடிலருகே
துன்பத்தில் உழன்று, துடித்துத் துடிதுடித்து
கிழிந்த கந்தையுடன் கிடைத்தசிறு கூலியுடன்
கடுமை உழைப்பாளி, கலங்கிக் கதறிநீர்
வெம்பித் திரும்புவதை வேதனை யுடன்கண்டேன்,
கண்ணைத் திருப்பினேன் காணச் சகியாமல்.

*　　*　　*

பிற்றையோர் நாளில் புகழ்சேர் டில்லியிலே
சாந்தினி சவுக்கில் மாந்தர் நடுவே
அகதிகள் அழுதுவரும் அல்லல் கூட்டத்தில்
அருமைப் பிரயாணி! அருமைப் பிரயாணி!
அன்றுமை பார்த்தது இன்னும் மறக்கவில்லை.
நேருக்கு நேராக நெருக்கும் கூட்டத்தில்
உற்றார் இறந்து உறவினரும் தானிழந்து
பற்றி வாழ்வதற்கு பாதைவழி தெரியாமல்
துடித்த உமைக்காண நெஞ்சம் உடைந்ததய்யோ!
கோபக்கனல் வீசிக் கொந்தளிக்கும் உம்மனத்தை
யாரே அறியவல்லார்? யாரே அறியவல்லார்?

*　　*　　*

மீண்டும் ஒருநாள் சியாங்கின் ஷாங்காயில்
உல்லாச வசபட்டு ஊர்சுற்றி வருகையிலே,
முதுகு வளைந்துநீர் முதுமை முன்செல்ல
இழுக்க முடியாது இழுக்கும் ரிக்ஷாவை
பார்த்த போதுநான் பதறிப் போய்விட்டேன்
ரத்தச் சிவப்பாய் சித்தம் கலக்குகின்ற
கனலாய் உம்கண்கள் தகித்துத் தெறித்தனவே
சுரண்டும் அட்டைகளை சுட்டெரிக்கும் தீப்போலே.

*　　*　　*

இன்றுமை பார்க்கின்றேன் வேறோர் நிலைமையிலே
மக்கள் சீனவின் மகிழ்ச்சிநிறை பீகிங்கில்
நிமிர்ந்த நன்னடையும் நேர்கொண்ட பார்வையும்
அமைந்து இருக்கின்ற அழகைப் பார்க்கின்றேன்.
துப்பாக்கி ஏந்திநீர் துடுக்காய் தோன்றுவது
அப்பப்பா! பார்ப்பதற்கு ஆயிரங்கண் போதாது.
உறுதி காணுகிறோம் உமது கண்களிலே;
உண்மை உணருகிறோம்; உரிமை ஒருகிறோம்
பயம் காணவில்லை; பசப்பும் பார்க்கவில்லை.
உலகத்து மக்களின் ஓங்காரக் குரலாய்நீர்
உன்னதக் கருத்துகளை ஓங்கிச் சாற்றுகிறீர்;
கலங்கிய உள்ளத்தின் கலங்கரை விளக்காக
அய்யா பிரயாணி அமரர் ஆகிவிட்டீர்.
வெற்றி உமதே! வெற்றி உமதே!

—தழுவி தமிழாக்கியது சிங்கை பெ. சீனிவாசன்

# லமற்றோருக்கு நிலம்

கொள்கை அறிக்கையை மீண்டும் வரையறுத்து மகாநாட்டில் ஒரு உடன்பாடு தேர்ந்தெடுக்கப்பட்டது.

[illegible] லத்திற்காகவும், சுதந்திரத்திற்காகவும் விவசாய மக்கள் அனைவரையும் ஒன்றுபடுத்துவதே கிசான் சபாவின் முன்னுள்ள பிரதானமான கடமை என்று தோழர் நம்பூதிரிபாட் கொள்கை அறிக்கையை சமர்ப்பித்துப் பேசுகையில் குறிப்பிட்டார்.

### காமன்வெல்த்திலிருந்து வெளியேறு

இந்தியப் பொருளாதாரம் உள்நாட்டு, வெளிநாட்டு சுரண்டல்காரர்களின் செல்வாக்கு, ஆதிக்கத்தின் கீழ் இன்னும் இருப்பதாக அவர் கூறினார். இந்தப் பொருளாதாரத்தில் விவசாய உறவுகள்தான் கேந்திரமான பிரச்னையாகும். பிரிட்டிஷ் காமன்வெல்த்துடன் இருக்கும் எல்லா உறவுகளையும் துண்டிப்பதன் மூலமும், எல்லா நாடுகளுடனும் சுதந்திரமாக சமத்துவ அடிப்படையில் வியாபார, கலாச்சார உறவுகளை ஏற்படுத்திக் கொள்ளுவதின் மூலமும் நம் தேசத்தை [illegible] பிடிப்பிலிருந்து விடுவிக்க வேண்டும்.

இந்தக் கோரிக்கைகளுக்காகப் போராடும் அதே சமயத்தில், நிலப் பிரபுத்துவத்தை ஒழிப்பதற்காகவும் கிசான் சபா போராடும். நிலமில்லா விவசாயிகளுக்கு நிலத்தைப் பங்கு போட்டுக் கொடுப்பதற்காகவும், விவசாயிகளுக்கு குறைந்த வட்டியில் கடன் வசதி முதலிய சலுகைகள் அளிக்கவும், விவசாய உற்பத்திப் பண்டங்களுக்கு நியாய விலை நிர்ணயிக்கவும் கிசான் சபா உறுதியாகப் போராடும்.

### வீரஞ்செறிந்த போராட்டங்கள்

கிசான் சபாவின் பொதுக் காரியதரிசி தோழர் பங்கிம் முக்கர்ஜி கடந்த ஆறு ஆண்டுகளில் நடைபெற்ற மகோன்னதமான விவசாயப் போராட்டங்களை விவரமாக எடுத்துக் கூறினார். நாடுபூராவும் நடைபெற்ற இந்த வீரம் செறிந்த போராட்டங்களை நசுக்குவதற்காக மிருகத்தனமான பயங்கர அடக்குமுறையைக் காங்கிரஸ் ஆட்சியாளர் ஏவிவிட்டிருந்த போதிலும், அகில இந்திய கிசான் சபா இன்று மகத்தான, சக்தி மிக்க ஸ்தாபனமாக விளங்குகிறது என்று அவர் கூறினார். மக்கள் இயக்கத்தை யாராலும் அழிக்க முடியாது என்றும், அடக்குமுறைக்குப் பின்னர் இன்று கிசான் சபாவின் அங்கத்தினர் தொகை அதன் சரித்திரத்தில் இதற்கு முன் என்றுமே இருந்ததைக் காட்டிலும் அதிகமாக இருப்பதாகவும் தோழர் பங்கிம் முக்கர்ஜி குறிப்பிட்டார். கடந்த ஆறு வருடங்களில் தெலிங்கானா, திரிபுரா, மணிப்பூர், ஆந்திரா, மலபார், பஞ்சாப், வங்க முதலிய பல இடங்களிலும் நடைபெற்ற மகத்தான போராட்டங்களை அவர் விவரித்தார்.

கிசான் சபா சரித்திரத்தில் கடந்த ஆறு வருடங்களில் பல முக்கியமான சம்பவங்கள் நிகழ்ந்தன. கொடிய தாக்குதலுக்கும், அடக்குமுறைக்கும் கிசான் சபா இலக்காயிற்று. கல்கத்தாவிலிருந்த கிசான் சபாவின் தலைமைக் காரியாலயத்தை 1947ல் போலீஸ் சோதனை செய்து, மூடி சீல் வைத்தது. 1951 ஆரம்பத்தில் தடை நீங்கிய பின்னர், கிசான் சபா மீண்டும், புதிதாக ஆரம்பத்திலிருந்தே சகல வேலைகளையும் செய்யவேண்டி யேற்பட்டது.

ஐக்கிய கிசான் சபாவுடன் ஒன்றாகக் கலப்பதற்காக முயற்சிகள் செய்யப்பட்டன. தற்சமயம் இந்த ஸ்தாபனத்தின் குஜராத், உத்திர பிரதேசக் கிளைகள் அகில இந்திய கிசான் சபாவுடன் இணைக்கப்பட்டுள்ளன.

### தலைவர் சொற்பொழிவு

சோவியத் யூனியனையும், மக்கள் சீனாவையும் சமீபத்தில் சுற்றிப்பார்த்து வந்த திரு. இந்துலால் யாக்னிக் அந்நாடுகளில் தாம் நேரில் கண்ட விஷயங்களை மிகவும் உருக்கமாக எடுத்துக் கூறினார். அந்நாடுகளில் உள்ள மக்களின் வாழ்க்கை நிலைமையை இந்திய மக்களின் வாழ்க்கை நிலைமையுடன் ஒப்பிட்டுக் காட்டி, எப்படி நம் வாழ்க்கை நிலைமை நாளுக்குநாள் சீரழிந்து வருகிறது என்பதையும், பிரிட்டிஷ் ஆதிக்கத்தினாலும், அமெரிக்க ஏகாதிபத்தியப் போட்டியினாலும் நம் பொருளாதாரம் சிதைந்து வருகிறது என்பதையும் தெளிவாக விளக்கினார்.

நமது 'நடுநிலைமை பிரதம மந்திரி' பண்டித நேருவின் முழு சம்மதத்துடனும், ஆதரவுடனும்தான் இந்த சம்பவங்கள் நடைபெறுகின்றன. சீனாவிலிருந்து உதைத்து விரட்டப்பட்ட ஏகாதிபத்தியத்திற்கு, இந்தோ-சீனாவில் முறியடிக்கப்பட்டுவரும் ஏகாதிபத்தியத்திற்கு, கொரியாவில் துவம்சமாக்கப்பட்ட ஏகாதிபத்தியத்திற்கு பண்டித நேரு நம் நாட்டில் இருப்பிடம் தருகிறார் என்று அவர் குறிப்பிட்டார்.

### வாழ்த்துச் செய்திகள்

நூற்றுக்கணக்கான மக்கள் ஸ்தாபனங்களிலிருந்து மகாநாட்டிற்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகளும், தந்திகளும் வந்து குவிந்தன. இந்திய சர்க்காரினால் அனுமதி மறுக்கப்பட்ட சீன, இந்தோனேசிய விவசாய தூது கோஷ்டிகள் உணர்ச்சி மிக்க வாழ்த்துச் செய்திகளை அனுப்பியிருந்தன. இந்த தூது கோஷ்டிகளுக்கு இந்தியாவிற்கு வர அனுமதி மறுத்ததைக் கண்டித்து மகாநாடு ஒரு தீர்மானம் நிறைவேற்றியது.

இந்தோனேசியா, ஜெர்மனி, போலந்து, செக்கோஸ்லோவேகியா, ருமேனியா முதலிய தேசங்களிலிருந்தும் வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன.

வீரமிக்க போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும் நேபாள விவசாயிகளின் சார்பில், நேபாள கிசான் சபாவின் காரியதரிசி தோழர் ஷாம்புராம் மகாநாட்டை வாழ்த்தினார். சிலோனிலிருந்து வந்திருந்த சகோதரப் பிரதிநிதிகள் கோஷ்டியின் தலைவரான தோழர் ராமநாதன் சகல பகுதி ஜனநாயக சிலோன் மக்களின் சார்பில் மகாநாட்டை வாழ்த்தினார்.

பல்லாயிரக்கணக்கான விவசாய மக்களை ஒன்றுதிரட்டி மகத்தான கிசான் சபாவைக் கட்டிவளர்த்த பல தலைவர்கள் இந்தியா பூராவிலிருந்தும் மகாநாட்டிற்கு வந்திருந்தார்கள். கார்யானந்த சர்மா பீஹாரிலிருந்தும், பஞ்சாபிலிருந்து சுர்ஜித்சிங்கும், மஹாராஷ்டிரத்திலிருந்து சர்தேசாயும், நானா பாட்டிலும் வந்திருந்தனர். வார்லி மக்களின் தலைவர் பருலேகர், திரிபுரா மக்களின் இணையற்ற வீரர் தசரத தேப், வங்கத்திலிருந்து அப்துல்லா ரசூல், பிஸ்வநாத் முக்கர்ஜி, ஆந்திராவிலிருந்து கிருஷ்ணா ராவ், வாசுதேவ ராவ், பிரசாத ராவ், தமிழ்நாட்டிலிருந்து ஸ்ரீனிவாச ராவ், மணலி கந்தசாமி முதலிய பலர் வந்திருந்தனர்.

### ஸ்டாலினுக்கும், தியாகிகளுக்கும் வணக்கம்

தோழர்கள் ஸ்டாலின், கோட்வால்டு மரணத்திற்கு ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்தும், இந்திய மக்களின் சுதந்திர ஜீவியப் போராட்டத்தில் உயிர்நீத்த பல தியாகிகளுக்கு வணக்கம் செலுத்தியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

சோவியத் யூனியன், மக்கள் சீன, மக்கள் ஜனநாயகங்களின் மகத்தான சாதனைகளை விளக்கும் கண்காட்சிகள் மகாநாட்டில் வைக்கப்பட்டிருந்தன. பல்லாயிரக்கணக்கான விவசாய மக்களை இந்தக் கண்காட்சிகள் ஆகர்ஷித்தன.

"சோவியத், சீன மக்களின் விடுதலைப் போராட்டங்களும் சாதனைகளும் இந்திய விவசாயிகளுக்கும், பொதுவாக இந்திய மக்கள் அனைவருக்குமே மிகச் சிறந்த உதாரணமாகத் திகழ்கின்றன" என்று இந்தக் கண்காட்சிகளை ஏப்ரல் 21ம் தேதியன்று திறந்து வைக்கும்பொழுது தோழர் பங்கிம் முக்கர்ஜி குறிப்பிட்டார்.

ஏப்ரல் 26ம் தேதியன்று திருமதி கூத்தாட்டுகுளம் மேரியின் தலைமையில் சமாதான மகாநாடு நடைபெற்றது. பேராசிரியர் ஹண்டே சேரி, சுகதன் முதலியோர் சமாதான இயக்கத்தின் முக்கியத்துவத்தை வற்புறுத்திப் பேசினர். கொரியாவில் உடனடியாக யுத்த நிறுத்தம் ஏற்பட வேண்டுமென்றும், ஐந்து வல்லரசு ஒப்பந்தம் ஏற்பட வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன. சமாதான மகாநாட்டில் சுமார் 25,000 மக்கள் கலந்துகொண்டனர்.

புது வருடத்திற்கு அகில இந்திய கிசான் சபாவின் நி

(9-ம் பக்கம் பார்க்க)

# விழாவில் இந்தியா கலந்துகொள்ளக்கூடாது

## னை தடுக்க முன்வரவும்

### நேருவின் புகைத்திரை

பண்டித நேரு, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் நம் நாட்டை சுரண்டுவதை புகைத்திரை போட்டு மறைக்கலாம். ஆனால் உண்மை நிலைமை அவருடைய புகைத் திரையை கிழித்து தெரிகிறது. நேரு 23 வருடங்களுக்கு முன்பு சொன்னதை இன்றும் உண்மை என்று நிரூபிக்கிறது.

இது செய்யப்படாதவரை சாம்ராஜ்யத்திற்குள் இந்தியாவின் நிலைமை அடிமைப்பட்டதாகவே இருக்கும். சுரண்டல் தொடர்ந்து நடைபெறும், என்று நேரு அன்று சொன்னார். நேரு அந்த பிரசங்கத்தில், "ஐயர் காங்கிரஸ் மகாநாடு இந்தக் கடன்களை (ஏகாதிபத்தியத்தால் திணிக்கப்பட்டவை) ஒப்புக்கொள்ள மறுக்கிறது; [illegible] அதற்காகப் பாடுபடவேண்டும்."

ஆனால் இன்று அதே காமன்வெல்த்தைப்பற்றி புகழ்மாலை சூட்டுகிறார். இந்திய மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதியை காற்றில் விட்டுவிட்டார். இதன் விளைவென்ன? பிரிட்டிஷாருக்குத் தர வேண்டிய 600 கோடிரூபாயை ஏப்பம் விட்டுவிட்டனர். நம் நாட்டின் ஏழை பாட்டாளி விவசாயி மக்களின் உழைப்பின் பலன் பறிபோய்விட்டது.

### பிரிட்டிஷ் நலனை நாம் பாதுகாக்க வேண்டுமாம்

இன்று நாம் எதிர்நோக்கியிருக்கும் பிரச்னைகள் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகளால் திணிக்கப்பட்டுள்ள பிரச்னைகள். பிரிட்டிஷ் மூலதனம் நம் மீது திணிக்கப்பட்டுள்ளது. நாம் அவற்றைப் பாதுகாக்க வேண்டுமாம்!

காமன்வெல்த் உறவு இந்தியாவின் [illegible] பிடிப்பை தளர்த்தியிருக்கிறதா? இல்லை. [illegible] இன்றும் பிரிட்டிஷ் [illegible] நம் நாட்டிலிருந்து ரூ. 40 கோடியை வருடாவருடம் லாபமாக வாரிக் கொண்டு போகின்றனர். கப்பல் கம்பெனிகளும், இன்சூரன்ஸ் கம்பெனிகளும் நம்முடைய அன்னியநாட்டு வியாபாரத்தை கிரகிப்பதின் மூலமாக மறைமுகமாக கொள்ளைகொண்டுசெல்லும் கோடானுகோடி ரூபாய் இந்தக் கணக்கில் சேர்க்கப்படவில்லை. இன்ஷூரன்ஸ் மூலம் வருடத்திற்கு 100 கோடி ரூபாய் கொள்ளையடிக்கிறார்கள். நம்முடைய இறக்குமதி-ஏற்றுமதியை நிர்ணயிக்கும் பிரிட்டிஷ் கம்பெனிகள் அடிக்கும் கொள்ளை வேறு.

ஒரு வித்தியாசம். நேரு சர்க்கார் வருவதற்கு முன்னால், இரண்டாவது உலகயுத்தம் உச்சகட்டத்தில் இருந்த போதுகூட தொழில்கள் இன்று கிடைப்பதைவிட குறைந்த லாபத்தையே சம்பாதித்து வந்தன. நேரு சர்க்கார் வந்த பிறகு, எந்தச் சமயத்திலும் பிரிட்டிஷ் முதலாளிகள் இந்தியாவில் 20% குறைந்த லாபத்தை பெறவில்லை.

### ஏகாதிபத்யவாதிகள் குதூகலம்

அப்படியிருக்கையில், 'நியூ காமன்வெல்த்' என்ற அதிகார பூர்வமான பத்திரிகை கீழ்வருமாறு எழுதுவது ஆச்சரியமில்லையல்லவா?

"இந்தியக் கம்பெனிகளை ஆரம்பிக்க விரும்பும் பிரிட்டிஷ் முதலாளிகள் இந்தியாவுடன் வியாபாரம் செய்ய வேண்டும் எனபதோடல்லாமல், இந்தியாவிற்குள்ளும் வியாபாரம் செய்ய வேண்டும். இதைச் செய்தால் 19ம் நூற்றாண்டில் வியாபாரிகளுக்கு கிடைத்த சந்தர்ப்பங்களைவிட அதிக சந்தர்ப்பங்கள் கிடைக்காது என்று கூறுவதற்குக் காரணமில்லை."

கிழக்கிந்திய கம்பெனி கொள்ளைக்காரர்களான ராபர்ட் கிளைவ், வாரன் ஹேஸ்டிங்ஸ், இன்னும் மற்றோர்களையும் எண்ணி பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகளின் நாக்கில் ஜலம் ஊறுகிறது, இப்படி இருக்கிறது நம்முடைய காமன்வெல்த் கூட்டுறவு!

காமன்வெல்த் கூட்டுறவை தூக்கிப் பிடித்துப் பேசுகையில், பண்டித் நேரு, அது நம்மை பொருளாதாரத் துறையில் எந்த விதத்திலும் கட்டுப்படுத்தவில்லை என்று பாராளுமன்றத்தில் கூறினார். ஆனால் ஒவ்வொரு காமன்வெல்த் மந்திரிகள் மகாநாடும் ஒவ்வொரு விதத்தில் நம் வியாபாரத்தை கட்டுப்படுத்தும் முடிவுகளை எடுத்துள்ளது. இது பொருளாதார தலையீடு இல்லையா? இல்லை என்றால், பின் என்ன?

முந்திய காமன்வெல்த் மகாநாட்டிற்கு பிறகு விடப்பட்ட அறிக்கை பின்வருமாறு கூறிற்று:

"அபிவிருத்தி செய்ய வேண்டுமென்றால் வேலை சர்வதேசிய ரீதியில் பங்கு போடப்பட வேண்டும். இதன் அர்த்தமென்ன வென்றால் வளர்ச்சியடைந்த நாடுகள் தாங்கள் அதிகமாக உற்பத்தி செய்யும் பொருள்களில் பெரும் பகுதியை ஏற்றுமதி செய்ய வேண்டுமென்பதோடல்லாமல், அவற்றிற்குப் பதிலாக இறக்குமதியும் செய்ய வேண்டும். வேறு விதத்தில் சொல்வதானால் இரண்டாம் பட்சமான தொழில்கள் வளர்ச்சியடைந்த பிரதேசங்களில் ஆரம்பிக்கப்படக் கூடாது." (பிரிட்டிஷ் செய்தி ஸ்தாபன வெளியீடு).

### தொழில் வளர்ச்சிக்குத் தடை

ஒளிவு மறைவு இன்றிச் சொல்வதினால், இதன் அர்த்தம் என்ன வென்றால் இந்தியா உருக்கு, யந்திர உற்பத்தி, மற்றும் பெரும் தொழில்களை ஆரம்பிக்கக் கூடாது என்பதே. உபயோகத்திற்குத் தேவையான பொருள் உற்பத்தித் தொழில்களையும், பஞ்சாலைத் தொழில்களையும்கூட இந்தியா வளர்க்கக் கூடாதாம்! ஆனால் மூலப் பொருள் உற்பத்தித் தொழில்களைத் தான் வளர்க்க வேண்டுமாம்! விவசாயம், மைக்கா, எங்கும் கிடைக்காத பொருள்கள், மாங்கனீஸ், உலோகப் பொருள்கள், இதுபோன்ற தொழில்களை தான் இந்தியா நடத்தவேண்டுமாம்! இந்திய மூலப் பொருள்களை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு சப்ளை செய்துவிட்டு, பதிலாக தொழில் உற்பத்திப் பொருள்களை இந்தியா வாங்குவதற்கு ஒப்புக்கொள்ள வேண்டுமாம்! வேறு விதத்தில் சொல்வதனால், ஏகாதிபத்திய வாதிகள் உற்பத்தி செய்யும் பொருள்களுக்கு மூலப் பொருள் உற்பத்தி செய்து கொடுக்கும் நாடாக விளங்கவேண்டுமாம்!

இந்தத் தீர்மானங்களில் எல்லாம் நம் நிதி மந்திரி சிந்தாமணி தேஷ்முக் கையொப்பம் இட்டுள்ளார். இந்த நிலைமையில் ஐந்தாண்டுத் திட்டம், தொழில் வளர்ச்சியைப் பற்றி கவலைப் படாததில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? இதுதான் பொருளாதாரத் தலையீடற்ற காமன்வெல்த் நட்புறவு!

### வியாபாரத்திற்குத் தடை

நமது மக்கள் பட்டினி கிடக்கிறார்கள். ஆனால் சணல் மில்களை சொந்தமாக வைத்துள்ள பிரிட்டிஷ் முதலாளிகள் சீனாவிற்கு சணலை விற்று அதற்குப் பதிலாக நமக்குத் தேவையான அரிசியை வாங்குவதைத் தடை செய்கின்றனர். நமது தொழிலாளிகள் வேலையைவிட்டு நீக்கப்படுகின்றனர்; மில்கள் நிறுத்தப்படுகின்றன; வேலை நேரக் குறைவால் தொழிலாளிகள் சம்பளம் குறைக்கப்படுகிறது. ஆனால் நம்முடைய விவசாயிகளும், தொழிலாளிகளும் உற்பத்தி செய்யும் சணலை சீனாவிற்கு விற்க இடம் கொடுக்க மாட்டார்கள்; நம்முடைய சர்க்காருக்கு இந்த மில் முதலாளிகளை ஒன்றும் செய்ய முடியாது; அவைகள் வெள்ளை முதலாளிகளின சொத்து. நாம் அவர்களோடு காமன்வெல்த் கூட்டுறவில் இறங்கியிருப்பதால், அவர்களை ஒன்றும் செய்ய முடியாது!

சென்னை டிராம்வேயை நடத்தும் வெள்ளை முதலாளிகள் நாட்டின சட்டத்தை காலடியில் போட்டு துவைக்கலாம். அவன் சென்னை நகரத்தில் 14 லட்சம் மக்களுக்குச் சொல்லொணா கஷ்டத்தை உண்டு பண்ணலாம். அவன் ராஜ்ய முதலமைச்சர் வார்த்தையை மீறி நூற்றுக் கணக்கான தொழிலாளிகளை ஆட்குறைப்புச் செய்யலாம். ஆனால் அவனையோ அவனுடைய 'சொத்தையோ' நாம ஒன்றும் செய்ய முடியாது? ஏன் இந்த நிலைமை? காமன்வெல்த் கூட்டுறவின் மகிமை இது!

### மக்கள் போராடவேண்டும்

நேரு முன்பு சொன்னதை எல்லாம் மறுக்கலாம். காங்கிரசின் தலைவன் என்ற முறையில் நாட்டு மக்களுக்குக் கொடுத்த ஒவ்வொரு வாக்குறுதியையும் மீறலாம்! ஒருவேளை இப்போது அவர் தான் கொடுத்த வாக்குறுதிகளை நினைத்து வெட்கப்பட்டாலும் படலாம்.

ஆனால் மக்கள் அந்த வாக்குறுதிகளை மறக்கமாட்டார்கள். ஏன என்றால் அவர்கள் எதற்காகப் போராடினார்களோ அவை நியாயமானவை, ஏனென்றால், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் நம் நாட்டை சுரண்டுவதையும், அது நமக்குச் சொல்லொணாத் துயரங்களை இழைத்ததையும் தொடர்ந்து நடத்தி வருகிறது.

இந்தநிலைமையில் இந்தியா முடிசூட்டு விழாவில் கலந்து கொள்வது மக்களை அவமதிப்பதாகும். இது அவர்களுடைய மகத்தான ஏகாதிபத்திய எதிர்ப்புப் பரம்பரைக்கு, சுதந்திரம் ஜனநாயகத்தின மீது அவர்களுக்கு உள்ள ஆர்வத்திற்கு இழுக்காகும்.

கோடானு கோடி இந்திய மக்கள் அனைவரும் ஒரே குரலில் இதை எதிர்த்து இப்போதே கண்டனம் செய்ய வேண்டும்; நாட்டிற்கு ஏற்பட்டுள்ள இந்த கேவலத்தை தடுக்கவேண்டும்.

## ஆர்ப்பாட்டம் நடத்துக!

நமது இந்திய சர்க்கார் பிரதம மந்திரி லண்டனில் சமீபத்தில் நடைபெறவிருக்கும் ராணி எலிசிபெத் முடிசூட்டு விழாவிற்கு போக இருக்கிறார். நாட்டு மக்கள் விரும்பாவிட்டாலும் அவர் செல்ல முடிவு செய்துள்ளார்.

இந்திய முடிசூட்டு விழாவில் கலந்துகொள்வதை எதிர்த்து கூட்டங்களும் ஊர்வலங்களும் ஆர்ப்பாட்டங்களும் நடத்தப்படவேண்டும். சகல கட்சி யூனிட்டுகளும் இப்பணியில் முனைந்து வேலைசெய்ய வேண்டும். பெரும் இயக்கத்தை நடத்தி பண்டித நேரு லண்டனுக்குப் போகாமல் தடுக்கவேண்டும். கூட்டங்களின் மூலமாக தீர்மானம் நிறைவேற்றி கண்டனத்தை நேருவுக்கு தெரியப்படுத்துங்கள். ஜனசக்திக்கும், கிராஸ்ரோட்ஸுக்கும், மற்றப்பத்திரிகைகளுக்கும் செய்திகளை அனுப்புங்கள்.

பிரதம மந்திரி புறப்படுவதற்கு முன்னும் பெரும் இயக்கம் உருவாகவேண்டும். மக்கள் விரும்பினால் நேரு சர்க்காரின் இப்போக்கை தடுத்துநிறுத்த முடியும்.

## இலக்கிய விமர்சனம்:

# 'மு. வ.' வின் இரு நாவல்கள்

இன்றைய தமிழ் எழுத்தாளர் உலகில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருக்கும் எழுத்தாளர் சிலரில் டாக்டர் மு. வரதராசனும் ஒருவர்.

டாக்டர் மு. வ. இப்போது சென்னை பச்சையப்பன் கல்லூரியில் தலைமைத் தமிழ் போராசிரியராய் இருக்கிறார். தமிழில் சுமார் 35 நூல்கள் எழுதியுள்ளார். நாவல், சிறுகதை, நாடகம், வாழ்க்கை வரலாறு, இலக்கிய ஆராய்ச்சி, இவ்விதமாகப் பற்பல நூல்கள் எழுதிக் குவித்திருக்கிறார். இவருடைய நூல்களுக்கு நல்ல 'கிராக்கி' இருக்கிறது. நடுத்தர வர்க்கம், குறிப்பாக மாணவர் உலகம் இவரது நூல்களை ஆர்வத்தோடு படிக்கின்றது.

டாக்டர் மு. வ.வின் எழுத்துக்கள் புத்தக உருப்பெற்று சுமார் ஏழெட்டு ஆண்டுகள் தாம் ஆகின்றன. ஆயினும் இவருக்கு இவ்வளவு செல்வாக்கு எப்படி வந்தது? தமிழ் இலக்கியத்திற்கு இவர் செய்து வரும் தொண்டு என்ன? தமிழ் மக்களுக்கு இவரது எழுத்துக்களால் ஏதேனும் பயன் விளைந்திருக்கிறதா? இக்கேள்விகளுக்கு விடை அளிக்கப் புகுந்தால் அது ஒரு புத்தகம் ஆகிவிடும்! ஆயினும், இவரது நூல்களில் இரண்டைப்பற்றி விமர்சனம் செய்வதன் மூலம், 'ஜனசக்தி' வாசகர்களுக்கு ஓரளவு டாக்டர் மு. வ. வைப்பற்றி அறிமுகம் செய்துவைக்க முடியுமென்று நம்புகிறேன்.

இங்கே டாக்டர் மு.வ.வின் இரு நாவல்களை ஆராய்வோம்:

(1) மலர்விழி: இந்நாவல் 1950ல் எழுதப்பெற்றது, (281 பக்கங்கள்; விலை 3-12-0) இதன் கதைச் சுருக்கம் வருமாறு:—

ஜில்லா கலெக்டர் செல்வநாயகம் ஒரு தமிழன்பர்; துறவு மனப்பான்மையும், அன்பு உள்ளமும் கொண்டவர்; அவர் மனைவி காஞ்சனை; அவள் கலையுணர்ச்சி மிகுந்தவள்; பணத்தாசை கொண்டவள்; சித்திரம் எழுத வல்லவள்; சிலப்பதிகாரமும் பயின்றவள். இவர்கள் இருவருக்கும் குழந்தைப்பேறு இல்லாமையால், நாகு என்ற பையனை வளர்ப்புப் பிள்ளையாக வளர்த்து வருகின்றனர்.

நாகுவுக்கும் ஒரு சாதாரணக் குடும்பத்தைச் சேர்ந்த மலர்விழிக்கும் திருமணம் ஆகின்றது. மலர்விழி 'இண்டர்மிடியட்' வரை படித்தவள்; அறிவும் அஞ்சாமையும் உடையவள்; ஆனால் அவள் முன்பின் யோசியாமல் நாகுவின் மனைவியாகி விடுகிறாள். ஆயினும் இல்வாழ்வில் அவளுக்கு சுகம் கிடைத்ததா? இல்லை. நாகு அவளைக் காதலிக்கவில்லை; தனது வளர்ப்புத் தாயைக் காதலிக்கிறான்!

இந்த விபரீத உறவினால் மலர்விழியின் வாழ்வு நரக வாழ்வு ஆகிறது. அவளது அக்காள் புருஷன் அண்ணாமலையின் உதவியால், அவள் லேடி வெல்லிங்டன் கல்லூரியில் ஆசிரியைப் பயிற்சி பெறுகிறாள். பயிற்சி முடிந்ததும், அறிவு என்னும் அமுதசுரபியின் மூலம் மக்களின் அறியாமையைப் பிணியைப் போக்கும் மணிமேகலை ஆகிவிடுகிறாள்; மலர்விழி மக்களுக்கு தனது கல்விச் செல்வத்தை வாரி வாரி வழங்குகின்றாள்.

இதற்கிடையில், செல்வநாயகத்தின் கலைக் குடும்பம் சீரழிகிறது. அவர் மாரடைப்பால் இறக்கிறார்; தீய ஒழுக்கம் புரிந்த காஞ்சனை தற்கொலை செய்து கொள்ளுகிறாள்; நாகு இராணுவத்தில் சேருகிறான்.

இக்கதையை கலெக்டர் செல்வநாயகத்தின் உதவியால் ரெயில்வேயில் டிக்கெட் பரிசோதகன் வேலை பெற்ற முத்தய்யன் கூறுவதாக ஆசிரியர் எழுதியுள்ளார்.

விமர்சனம்

கலைஞர்களின் அன்றாட வாழ்க்கையில் ஒழுக்கம் வேண்டும்; அவர்கள் அறநெறியில் நில்லாவிடில் அவர்கள் குடும்பமே நாசமுறும்' என்பதை வலியுறுத்தவே டாக்டர் மு. வ. இந்நாவல் எழுதி யுள்ளார். இதற்கு கலெக்டர் செல்வநாயகத்தின் குடும்பக் கதையை எடுத்துரைத்து, 'கலை செய்த வம்பு இது!' என்கிறார்.

அவருடைய கதாநாயகியான மலர்விழி முத்தய்யனிடம் கூறுவதைக் கேளுங்கள்: "நான் கலையைப் பழிப்பதாகச் சொன்னீர்களே அண்ணா! பார்த்தீர்களா? கலையுணர்ச்சி மிகுந்தவர்களின் வாழ்க்கையில் வெறுப்புத் தோன்றினால் என்ன செய்கிறார்கள்? எத்தனையோ கலைஞர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்திருக்கிறேன் அண்ணா. அவர்களுடைய கலை அழியாச் செல்வமாய் உலகத்திற்குப் பயன்படுகிறதே தவிர, அவர்கள் அன்றாட வாழ்க்கையில் தாமும் வாழ்வதில்லை; மற்றவர்களையும் வாழ வைப்பதில்லை. தவிர, இன்னொன்று: பெரும்பாலான கலைஞர்களின் வாழ்க்கைக்கும் ஒழுக்கத்திற்கும் தொடர்பே இருப்பதில்லை; வரையறுத்த வாழ்க்கை அறநெறியைப் போற்றக் கலைஞர்களுக்குத் தெரியாது. மற்றவர்கள் மனத்தை அடக்கியாள்வது சாதாரணக் குதிரை ஏறிச் செல்வதுபோல. ஆனால் கலைஞர்கள் மனத்தை அடக்கியாள்வது சாராயம் குடித்த குதிரைமீது ஏறிச் செல்வது போல்தான்."

கலைஞர்களுக்கு ஒழுக்கம் வேண்டாம் என்று எந்த முற்போக்கு வாதியும் கூறமாட்டான். ஆனால் முதலாளித்துவ நாட்டிலே கலைஞர்களின் நிலை இப்படித்தான் இருக்கிறது. மக்களுடன் தொடர்பில்லாமல் தந்தக் கோபுரத்தில் வசிக்கும் கலைஞன், மக்களை அறிவிலிகள் என்று நிந்திக்கும் கலைஞன், தன்னகங்காரத்தால் திமிர் ஏறிப்போன கலைஞன் முதலாளித்துவ சமுதாயத்தில்தான் மலிந்திருக்கின்றான். இங்குதான் அவனுடைய ஒழுக்கமும் அழுகித் துர்நாற்றமடிக்கிறது. ஆனால் சோவியத் ருஷ்யாவிலும், மக்கள் சீனத்திலும் கலைஞர்கள் நிலை எப்படி இருக்கிறது? அங்கு கலைஞன் ஜனசமுதாயத்தின் குரலாக, மக்களின் புதல்வனாக, மக்களின் வழிகாட்டியாக, உழைப்பின் பெருமையை முரசு அறைவோனாக விளங்குகின்றான். அங்கு அவனது ஒழுக்கம் அப்பழுக்கற்றுச் சுடர்விடுகின்றது. இந்த உண்மையை டாக்டர் மு. வ. உணர்ந்து கொள்ளவில்லை. எனவேதான் அவர் 'பெரும்பாலான கலைஞர்கள் ஒழுக்கம் இல்லாதவர்கள்' என்று தமது கதாநாயகியின் மூலம் நமக்குக் கூறுகிறார்.

முதலாளித்துவ நாடுகளில் தான அறம்வேறு, ஒழுக்கம் வேறு என்ற நிலை உண்டு. அங்கேதான நாகுவுக்கும் மலர்விழிக்கும் நடந்ததைப் போன்ற பொருந்தாத் திருமணங்களும் நடைபெறுகின்றன; அங்கேதான் காஞ்சனைகளை நாம் காண முடியும்!

பாட்டாளி வர்க்கத்திற்காக தன்னை அந்தரங்க சுத்தியுடன் அர்ப்பணித்துக் கொண்ட கலைஞன் எவனும் அறத்தையும், ஒழுக்கத்தையும் புறக்கணிப்பதில்லை; அவற்றைத் தனது இருகண்களாகவே கருதிப் போற்றுகிறான்.

அறவழி நிற்றலைப் பற்றிப் பேசும் மலர்விழியை ஆசிரியர் மணிமேகலையாகச் சித்திரித்திருக்கிறார். ஆனால் கணவனால் கைவிடப் பெற்ற பெண்கள் எல்லோரும் மணிமேகலைகள் ஆகிவிட முடியுமா? வாழ்க்கைப் போராட்டத்திலிருந்து தப்பி ஓடி தன்னந்தனியாக சமுதாயத்தைச் செம்மைப் படுத்திவிட முடியுமா? முடியவே முடியாது.

சமுதாயத்தில் ஒழுக்கம் நிலவ வேண்டுமானால், சுரண்டுகிற வர்க்கம் பூண்டற்றுப் போகவேண்டும்.

ருஷ்யாவிலும், சீனாவிலும் மலர்விழிகள் மணிமேகலைகளாகவா காட்சி அளிக்கிறார்கள்? அங்கே அவர்கள் பள்ளி ஆசிரியைகளாக மட்டும் இருக்கவில்லை. "பட்டங்கள் ஆள்வதும், சட்டங்கள் செய்வதும் பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்!" என்று தலைநிமிர்ந்து கூறும் பாரதியின் புதுமைப் பெண் அங்கல்லவா வாழுகின்றாள்? அங்கு பெண்கள் பட்டம்மட்டும் பெற்றிருக்கவில்லை, சுப்ரீம் சோவியத்தில் (ருஷ்யப் பார்லிமெண்டில்) சட்டங்களும் இயற்றுகிறார்கள்!

## தி. க. சிவசங்கரன்

அல்லி: (1952 ஏப்ரலில் வெளியிடப்பெற்றது. 291 பக்கங்கள். விலை நபாய் நான்கு.) டாக்டர் - மு. வ.-வின் இந்த நாவலை இப்பொழுது விமர்சனத்திற்கு எடுத்துக்கொள்வோம்.

அல்லி மருத்துவக் கல்லூரி மாணவி. 23 வயது. தாயற்றவள். அவளது தந்தை சிவக்கொழுந்துவின் வற்புறுத்தலின் பேரில் சுப்புரத்தினம் என்ற எஞ்சினியரைத் திருமணம் செய்துகொள்கிறாள். சுப்புரத்தினம் ஆடம்பரப் பிரியன்; ஆங்கில நாகரிகத்தில் மோகம் கொண்டவன். அவன் அல்லியை அழகுப் பொம்மையாக, காமக்கருவியாக, வீட்டிலேயே வைத்திருக்க ஆசைப்படுகிறான். ஆனால், அல்லி டாக்டர் ஆகி மக்களுக்குத் தொண்டு செய்ய விரும்புகிறாள். இருவருக்கும் லட்சிய முரண்பாடு ஏற்படுகிறது.

அல்லி மருத்துவக் கல்லூரியில் மீண்டும் சேருகிறாள். சுப்புரத்தினம் அவளைப் புறக்கணித்து கண்டவளுடன் சுற்றுகிறான். அல்லியின் நகைகளைத் திருடி, தீய வழியில் செலவழிக்கிறான். இறுதியில் சியாமளா என்ற சமூக சேவகியின் வேலைக்காரியுடன் பம்பாய்க்கு ஓடிவிடுகிறான். அங்கு அவளையும் நிர்க்கதியாய் விட்டுவிடுகிறான்.

சுப்புரத்தினத்தின் உறவினர் ஒரு ஆசிரியர். அவர் பெயர் அறவாழி. அவர் ஒரு காந்தியவாதி, திருவள்ளுவதாசன்; புத்தகப்பிரியன். ஆசிரியர் அறவாழி அல்லிக்கு வழிகாட்டியாக விளங்குகிறார். அவருக்கு நோய் வந்துவிடுகிறது. எனவே பெங்களூரில் டாக்டராகப் பணியாற்றும் அல்லி அவரைச் சென்னையிலிருந்து அழைத்து வந்து சிகிச்சை செய்கிறாள்.

டாக்டர் அல்லியிடம் நர்ஸாக இருக்கிறாள் இன்பவல்லி. அவள் தூய மனம் படைத்த அறவாழியை நேசிக்கிறாள். ஆனால் இது அறவாழிக்குத் தெரியாது. இச்சமயத்தில் அல்லிக்கும் அறவாழியிடம் சபலம் தட்டுகிறது; ஆனால் அவள் சமாளித்துக்கொள்கிறாள்.

இதற்கிடையில், சீரழிந்து போன சுப்புரத்தினம் 'செக்' புத்தகத்தைத் திருடி ஜெயிலுக்குப் போகிறான். இறுதியில் மோட்டார் ஓட்டியாகி, வயிற்றில் அடிபட்டு இறக்கிறான். அவன் இறக்கும் போது ஒரு 'டயரி'யை விட்டுச் செல்கிறான். அதில் அவனது கடந்த கால வாழ்க்கைக்காக வருத்தம் தெரிவித்திருக்கிறான்.

அறவாழி இன்பவல்லியின் காதலை ஏற்றுக் கொள்ளவில்லை. 'இன்று உலகு உள்ள நிலையில் பலர் மணிமேகலைகளாய் வாழ்க்கை நடத்தினால் பெண்ணுலகும் திருந்தும்; ஆணுலகும் அறிவு பெறும்" என்கிறார் அறவாழி. எனவே, இன்பவல்லி செவிலித் தாயாகவே தொண்டாற்றுகிறாள். அல்லி டாக்டர் அல்லியாக மக்களுக்குச் சேவை செய்து தன் மனப்புண்ணை ஆற்றுகிறாள்; மக்கள் தொண்டில் தன்னை மறக்கிறாள்.

### விமர்சனம்:

இன்றைய தமிழ் இலக்கியத்தில் காதற்சுவை கொலை செய்யப்படுவதைப் பொறுக்க முடியாமல் டாக்டர் - மு. வ. இந்நூலை எழுதியிருக்கிறார். அறநெறியோடு வாழும் காதலே மெய்க்காதல் என்பதை நூல் முழுவதும் வற்புறுத்துகிறார்.

காந்திஜியின் 'இல்லறமும் பிரம்மசரியமும்' என்ற நூலின் தத்துவம் இந்நாவலில் நிரம்ப ஒளிவீசுகிறது, உடல், மனம் இவற்றைப் பண்படுத்தினால், புலனடக்கத்தைக்கைக்கொண்டால், காதல் செழிக்கும்; விபச்சாரம் குறையும்; நோயற்ற வாழ்வு உண்டாகும்; குடும்ப வாழ்க்கை சீர்படும் என்பதை ஆசிரியர் அறவாழியின் மூலம் நமக்கு எடுத்துரைக்கிறார் ஆசிரியர். ஆனால் வெறும் புலனடக்கத்தினால மாத்திரம் இவை நிகழ்ந்து விடுமா? 'திருடக்கூடாது' என்ற உபதேசத்தை எல்லோரும ஏற்றுக்கொள்வார்கள். ஆனாலும் சமுதாயத்தில் திருட்டு நடந்துக்கொண்டே யிருக்கிறதே! ஒருவன் திருடுவதற்குத் தூண்டும் சூழ்நிலை நீங்கினால் அல்லவோ திருட்டு நிற்கும?

எனவே வறுமை, பசி, விபசாரம் இவற்றை ஒழிக்க வேண்டுமானால். சமுதாயத்தின் இழி தளைகளைக் களையவேண்டுமானால் வெறுமனே உபதேசம் பண்ணிப் பயனில்லை. இவற்றுக்கு விளைநிலமாயிருக்கும் சமுதாய அமைப்பை அல்லவா மாற்ற வேண்டும்? 'திருடுவது இழிவு; உழைப்பது பெருமை' என்ற எண்ணம் மனிதனுக்கு ஏற்பட்டால்தான், அந்த எண்ணம் ஏற்படும்வகையில் சமூக அமைப்பு இருந்தால், கொலை, களவு, விபசாரம் அனைத்தும் ஒழியும். இந்த எண்ணம் உழைப்பாளி வர்க்கம் ஆட்சி புரியும் நாடுகளிலுள்ள மக்களிடம்தான் ஏற்படுகிறது; உழைப்பைச் சுரண்டி மக்களை ஒட்டாண்டி ஆக்குபவர்கள் ஆட்சிபுரியும் தேசத்தில் அறநெறி உபதேசத்துக்கு எவ்விதம் உரித்தான மதிப்புக் கிடைக்கும்? ஆயிரம் அறவாழிகள் தோன்றினலும் அவர்களுடைய உபதேசமெல்லாம் பாறையில் விதைத்த விதையாகத்தான் இருக்கும்!

மொத்தத்தில், டாக்டர் மு. வ.வின் நூல்களைப் படிக்கும்போது அறநெறி உபதேசங்களாகவே எனக்குத் தோன்றுகின்றன. மு.வ.வின் நாவல்களில் கலையைவிட கருத்துக்களுக்கே முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருக்கிறது. பாத்திர சிருஷ்டி, சம்பவக் கோவை இவைகளைவிட மனஓட்டங்கள்தாம் இவற்றில் அதிகம். மு. வ. வின் நூல்களைப்பற்றிச் சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானல், அவற்றை அறநெறிச் சாரம் என்றே அழைக்கவேண்டும்.

டாக்டர் மு. வ.வின் உள்ளம் நல்ல உள்ளம்; அவர் கூறும் அறநெறி சாலச் சிறந்தது. ஆனால் அவர் எண்ணங்களின் மூலமாகவே சமுதாயத்தைச் சீர்திருத்திவிட முடியும் என நினைக்கிறார்; "எண்ணமே வாழ்வு; எண்ணம் சீர்பட்டால் உலகம் சீர்படுவது திண்ணம்" (கி. பி. 2000த்தின் முன்னுரை) என்பது அவர் கருத்து.

எண்ணங்கள் எதிலிருந்து தோன்றுகின்றன? எண்ணங்கள் சூனியத்திலிருந்து தோன்றுவதில்லை. அவை சமுதாயத்திலிருந்து தோன்றுகின்றன; சமுதாயத்தின் இயக்கத்திலிருந்து உருவெடுக்கின்றன; சமுதாயச் சூழ்நிலைக்குத் தக்கவாறு மாறுகின்றன. சுருங்கச் சொன்னால், பொருள் இல்லாமல் எண்ணம் இல்லை; பொருள்களின் சலனத்திற்குத் தகுந்தபடிதான் எண்ணங்களும் ஏற்படுகின்றன. பொருள் உற்பத்திமுறையின் விளைவாகவே எண்ணங்களும் மனித உள்ளத்தில் உற்பத்தியாகின்றன. இதைத்தான் மார்க்ஸியம் நமக்குப் போதிக்கிறது.

ஆனால் டாக்டர் மு. வ. எண்ணங்களையே முதன்மையாக வைத்துப்பார்க்கிறார்; அவற்றுக்கு அடிப்படையாக இருக்கும் சமுதாயச் சூழ்நிலையை மறந்துவிடுகிறார். மனித உள்ளத்தை ஒரு பாத்திரம் என்று கருதுகிறார் மு. வ. அந்தப் பாத்திரத்திலிருந்து கெட்ட எண்ணங்களை வெளியே கொட்டிவிட்டு, நல்ல எண்ணங்களால் அதை நிரப்பிவிட்டால், மனிதன் அமரனாகிவிடுவான் என்றும் எண்ணுகிறார்! ஆனால் இது நடவாத காரியம். சமுதாயத்தின் சூழ்நிலைக்குத் தக்கபடி அல்லவோ நன்மையும் தீமையும் விளைகின்றன? அறமும் ஒழுக்கமும் தழைக்கின்றன? சூழ்நிலையை மாற்றினால்தான மனித உள்ளத்தையும் மாற்ற முடியும்.

மனித வாழ்வோடு ஒட்டாத எண்ணங்களால், மக்களின் இயக்கங்களோடு இரண்டறக் கலந்து செயல்வீரத்தை ஊட்டாத எண்ணங்களால் பயன் இல்லை. இதை டாக்டர் மு. வ. அவர்கள் நன்குணர்ந்து, தமது கருத்தை மாற்றிக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

முடிவாக, டாக்டர் மு. வ. வின் தமிழ்நடையைப்பற்றி ஒரு வார்த்தை.

மு. வ.வின் தமிழ் நடை எளிமையும், அழகும், இனிமையும் பெற்றுத் திகழ்கிறது. தமிழர் பண்பாட்டின் கண்ணாடியாக அது ஒளி வீசுகின்றது.

டாக்டர் மு. வ.வின் இலக்கியம் தமிழனுடைய தலைசிறந்த பாரம்பரியத்தைத் தன்னுள் கொண்டிருக்கிறது. அந்தப் பாரம்பரியத்தை மேலும் வளர்த்துச் செழுமைப்படுத்த வேண்டுமானால், டாக்டர் மு. வ. மக்களின் வாழ்க்கைப் போராட்டத்தை ஊன்றிக் கவனிக்கவேண்டும். அவர்களின் போராட்டத்தைப் புரிந்துகொண்டு, அதில் பங்கு கொள்ளவேண்டும்; மக்கள் வாழ வழிகாட்டவல்ல இலக்கியங்களைப் படைக்கவேண்டும். இதுவே அவருக்கு நமது பணிவன்பான வேண்டுகோள்.

# பாங்க் ஊழியர்களுக்கு எதிரான புதிய சதி!

## சாஸ்திரி தீர்ப்பின் துரோகம்

சென்ற 15 மாதகாலமாக காத்திருந்தனர் பாங்குகளில் வேலைசெய்யும் 60 ஆயிரம் குமாஸ்தாக்களும், சிப்பந்திகளும். அவர்களின் வேலை நிலைமையைப் பற்றிப் பரிசிலனை செய்த எஸ்.பஞ்சாபகேச சாஸ்திரி தலைமையில் இயங்கிய டிரிபியுனலின் முடிவை எதிர்பார்த்தனர். பாங்க் ஊழியர்களிடையே பரபரப்பையும் ஆத்திரத்தையுமே அந்த முடிவு உண்டாக்கி இருக்கிறது.

சம்பளம் குறைக்கப்பட்டு, வேலைநேரம் அதிகரிக்கப்பட்டு ஓவர்டைம் வேலையின் சம்பள விகிதம் குறைக்கப்பட்டு, பெருவாரியான ஆட்குறைப்பிற்கு வழிவகை செய்யும் தீர்ப்பே பஞ்சாபகேச சாஸ்திரியின் முடிவு. இந்தப் படுபாதகத் தீர்ப்பை இந்திய சர்க்கார் தயக்கமின்றி ஏற்றுக்கொண்டது. இதை எதிர்த்துத் தீவிரமாகப் போராட அகில இந்திய பாங்க் ஊழியர்கள் சங்கம் முன்வந்துள்ளது.

பாங்க் ஊழியர்களின் நியாயமான கோரிக்கைகளைப் பரிசிலனை செய்யாது, அவர்களைத் தாக்குவதே தனது நோக்கமாகக்கொண்ட முடிவை சாஸ்திரி டிரிபியூனல் எடுத்துள்ளது.

### சம்பள வெட்டு

இன்று குமாஸ்தாக்களின் ஆரம்பச் சம்பளம் ரூ. 62லிருந்து ரூ. 96 வரை, சாதாரண சிப்பந்திகளின் சம்பளம் ரூ. 35லிருந்து ரூ. 60 வரை உள்ளது. சாஸ்திரி டிரிபியூனல் அளித்துள்ள சம்பள விகிதமென்ன? குமாஸ்தாக்களுக்கு ஆரம்ப சம்பளம் ரூ.51லிருந்து ரூ. 65 வரைதான், சாதாரண சிப்பந்திகளுக்கு ரூ. 28லிருந்து ரூ. 40 வரைதான்.

சாஸ்திரியார் தீர்ப்புப்படி கொடுக்கப்பட இருக்கும் பஞ்சப் படி, பிராவிடண்ட் பணம் ஆகியவை விலைவாசிகள் அதிகமுள்ள இடங்களிலுள்ள ஊழியர்கள் மிகப்பெரும் அளவிற்குப் பாதிக்கப்படும் விதத்திலுள்ளன. எவ்விதம்?

'ஏ' பிரிவைச் சேர்ந்த ஒரு பாங்கில், டெல்லியில் வேலை செய்யும் ஒரு குமாஸ்தா ஆறு வருஷம் வேலை செய்தபின் இன்று அடையும் மொத்த வருமானம் ரூ. 175. ஆனால் சாஸ்திரியார் தீர்ப்புப்படி இனிமேல் அவருக்குக் கிடைக்கப்போகும் வருமானம் ரூ. 141தான். அவரது சம்பளத்தில் ரூ, 34 குறைக்கப்படும்.

20 வருஷ காலமாக வேலை செய்த ஒரு குமாஸ்தா இன்று அடையும் மொத்த சம்பளம் ரூ. 290, ஆனால் சாஸ்திரியாரின் தீர்ப்புப்படி அவரது சம்பளத்தில் ரூ. 45 குறைக்கப்படும். கீழ்த்தர சிப்பந்திகள் ரூ. 38தான அடைவார்கள்.

### ஊழியர்களைக் கொள்ளையடிக்கும் திட்டம்

இதற்குமுன் நியமிக்கப்பட்ட சென் டிரிப்யூனலின்படி பாங்க் ஊழியர்களின் வேலை நேரம் வாரத்திற்கு 36 மணி நேரம் என்றிருந்தது. இந்தத் தீர்ப்பை ஒரு அற்ப காரணத்தின்பேரில் சுப்ரீமகோர்ட் நிராகரித்தது. ஆனால் இன்றைய சாஸ்திரியாரின் தீர்ப்பின்படி பாங்க் ஊழியர்கள் ஒரு வாரத்தில் 39 மணி நேரம் வேலை செய்ய வேண்டுமென்று உயர்த்தப்பட்டது. இதுவும்போதாதென்று ஓவர்டைம் வேலையின் சம்பள விகிதமும் குறைக்கப்பட்டுள்ளது.

இதனால் 60 ஆயிரம் பாங்க் ஊழியர்களும் ஒவ்வொரு நாளும் 30 ஆயிர மணிநேரம் அதிக வேலை செய்யும்படி நிர்பந்திக்கப்பட்டுள்ளனர். அதாவது பாங்க் முதலாளிகளுக்கு புதிதாக 4622 குமாஸ்தாக்கள் சம்பளமின்றி சாஸ்திரியின் தீர்ப்பு அளித்துள்ளது.

சாஸ்திரியாரின் தீர்ப்பு இத்துடன் நின்றுவிடவில்லை. முதலாளிகள் தான்தோன்றித்தனமாக பல இடங்களுக்கு ஊழியர்களை மாற்றுவதற்கும், வேலையிலிருந்தே நீக்குவதற்கும் அனுமதி அளிக்கிறது.

பல வருடப் போராட்டங்களுக்குப் பிறகு பெற்றுள்ள வருடாந்திர போனசையும் குறைக்க முதலாளிகளுக்கு சாஸ்திரியார் தீர்ப்பு அனுமதி அளிக்கிறது. இத்துடன் பாங்க் ஊழியர்களைப் பனிரெண்டு பிரிவுகளாகப் பிரிப்பது சமமான வேலைக்கு சமமான சம்பளம் என்ற அடிப்படைக் கொள்கைக்கே முற்றிலும் விரோதமாக உள்ளது.

சென் டிரிபியூனலின் தீர்ப்பை சுப்ரீம கோர்ட் நிராகரித்த போதிலும், அதிலுள்ள நல்ல அம்சங்களை அமுல் நடத்தும் இந்தியாவெங்குமுள்ள பாங்க் ஊழியர்களின் ஒன்றுபட்ட போராட்டம் வற்புறுத்தமுடிந்தது. சர்க்காரும் சென் தீர்ப்பின் முக்கிய தீர்ப்புகளை ஏற்று அமுல்நடத்திவந்தது. இதுவும் போதாது. தங்களது நியாயமான கோரிக்கைகள் அனைத்தும் ஏற்கப்பட வேண்டுமென்று கிளர்ச்சி செய்ததனாலே பஞ்சாபகேச சாஸ்திரி நிலைமையில் டிரிபியூனல் நியமிக்கப்பட்டது. ஆனால் சாஸ்திரியாரின் தீர்ப்பு பாங்க் முதலாளிகள் ஆரவாரத்துடன் வரவேற்கும் தீர்ப்பைத் தந்துள்ளார்.

டால்மியாவின் பத்திரிகையான டைம்ஸ் ஆப் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் பெருமுதலாளிகளின் பத்திரிகைகளான 'ஸ்டேட்ஸ்மென்' ஆகிய பத்திரிகைகள் சாஸ்திரியார் தீர்ப்பை ஆரவாரத்துடன் வரவேற்கின்றன.

இவர்களது எக்காளம் நீடிக்கப்போவதில்லை. இந்தியாவெங்குமுள்ள 60 ஆயிரம் பாங்க் ஊழியர்கள் மேலும் ஒன்றுபட்டு உறுதியான போராட்டத்தின்மூலம் முதலாளிகள்-சர்க்கார் ஆகியோரின் கூட்டுச்சதியை முறியடிப்பார்களென்பதில் சந்தேகமில்லை. இந்தியப் பாட்டாளி வர்க்கமும், பொதுமக்களும் இவ்விதப் போராட்டத்திற்குப் பக்கபலமாக இருப்பார்களென்பதில் சந்தேகமில்லை.

# உத்தரப்பிரதேச ஆசிரியர்களின்

## மகத்தான நல்வாழ்வுப் போராட்டம்

உத்தரப் பிரதேச ஆரம்ப ஆசிரியர்களின்மீது ராஜ்ய சர்க்கார் தொடுத்த கொடிய அடக்குமுறை பலிக்கவில்லை.

அவர்கள் தங்களுக்கு நல்வாழ்வு கோரி மகத்தான போராட்டத்திலிறங்கினர். சகல சமாதானபூர்வமான வழிகளிலும் முயற்சி செய்தும் பலனில்லாது போகவே, இறுதியில் அவர்கள் போர்க்களத்தில் இறங்கினர். லட்சுமணபுரியில் சட்டசபை முன்பு பிப்ரவரி 23-ந்தேதி முதல் குரூப் குரூப்பாக உண்ணுவிரதமிருக்க ஆரம்பித்தனர்.

மார்ச் 8-ந் தேதியன்று மாகாணம் பூராவிலும் ஆரம்ப ஆசிரியர்களின் மகத்தான ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன. மார்ச் 20, 21ந் தேதிகளில் 80.000 ஆரம்ப ஆசிரியர்கள் மாகாணம் பூராவிலும் கண்டன வேலைநிறுத்தம் செய்தனர்.

ஏப்ரல் 9ந் தேதி வரையிலும் 574 ஆசிரியர்கள் சிறைக்கம்பிகளுக்குப் பின்னே தள்ளப்பட்டனர். சத்யாக்ரஹத்தில் ஈடுபட்ட ஒரு நடுத்தர வயது ஆசிரியையும் கைது செய்யப்பட்டார்.

ஏராளமான வாலிபர்களும், மாணவர்களும் கூட இந்தப் போராட்டத்தில் தீவிரப் பங்கெடுத்துக்கொண்டனர். இதுவரையிலும் 350 பேருக்கு பல்வேறான தண்டனைகள் கொடுக்கப்பட்டுள்ளன.

வேலைநிறுத்தத்திலீடுபட்டுள்ள ஒரு ஆசிரியரின் வயது முதிர்ந்த தாயார் உண்ணாவிரதமிருந்து உயிர் துறந்தார்

நாகரீகமான வாழ்க்கையை நடத்துவதற்கு அவசியமான குறைந்தபட்சக் கோரிக்கைகளை முன்வைத்துப் போராட்டத்திலிறங்கியுள்ள உத்தரப் பிரதேச ஆரம்ப ஆசிரியர்களுக்கு ஆதரவாக சகல பகுதி மக்களும் திரண்டுள்ளனர்.

ஏப்ரல் 20-ந் தேதியன்று நடைபெற்ற உத்தரப்பிரதேச ஆசிரியர்கள் சங்கக் கூட்டத்தில், சத்தியாக்கிரகப் போராட்டத்தை ஒத்தி வைப்பதாக முடிவெடுத்தனர். சர்க்காருக்கும், ஆசிரியர்கள் சங்கத்திற்குமிடையே சமரசமேற்படுத்த முயற்சித்துவரும் உ. பி. ராஜ்யக் காங்கிரஸ் தலைவர் அல்குராய் சாஸ்திரியின் வேண்டுகோள்படியே இம்முடிவெடுக்கப்பட்டது.

மேலும் ஏப்ரல் 30-ந்தேதிக்குள் இப் பிரச்னையில் ஒரு முடிவு கிடைக்கவேண்டுமெனறும், அதற்கு அடிப்படையாகத் தங்களின் மூன்று கோரிக்கைகளைச் சர்க்கார் ஒப்புக்கொள்ள வேண்டுமென்றும் கோரியுள்ளனர். (1) சத்தியாக்கிரகத்தின் போது கைதான எல்லா ஆசிரியர்களும் விடுதலை செய்யப்பட வேண்டும். (2) டிஸ்மிஸ் செய்யப்பட்ட, சஸ்பெண்ட் செய்யப்பட்ட எல்லா ஆசிரியர்களையும் மீண்டும் வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டும். (3) சங்க அங்கீகாரம் மீண்டும் அளிக்கப்படவேண்டும்.

# கோவில்பட்டி லாயல் மில் தொழிலாளர் ஆர்பாட்டம்

கோவில்பட்டி லாயல் மில் தொழிலாளிகள் 24-4-53ல் தாங்கள் மின்சார வெட்டால் மிகவும் பாதிக்கப்பட்டு குடும்பத்தை நடத்தமுடியாது திணறுவதால் கூட்டுறவு பண்டகசாலையில் தங்களுக்கு ரூ 10 க்கு சாமானகள் கொடுக்க வேண்டும். பண்டகசாலையில் பணம் இல்லையென்றால், மில் நிர்வாகம் பண்டகசாலைக்குக் கடனை அத்தொகையை கொடுக்க வேண்டுமென்று பண்டகசாலை தலைவரான மில் மானேஜரிடம் கோரினர்.

காங்கிரஸ் பாராளுமன்ற உறுப்பினரும் மில் முதலாளியுமான திரு. எ. வி. தாமஸ், இப்போது ஒன்றும் செய்வதற்கில்லை என்று சொல்லி விட்டதாக மில் மானேஜர் தொழிலாளிகளிடம் கூறினார். இந்தப் பதிலினால் ஆத்திரமடைந்த தொழிலாளிகள் சுமார் 400 பேர் 25-4-53ல் ஊர்வலமாக கோவில்பட்டி காங்கிரஸ் எம். எல். ஏ. திரு. கே. ராமசாமி தாஸிடம் சென்று குறைகளை கூறினர். தொழிலாளிகள் கேட்பது மிகவும் நியாயம் என்று ஒப்புக்கொண்டு அவர் மில் மானேஜரை சந்தித்தார். ஆனால் மில் மானேஜர் அவரிடமும் தொழிலாளிகளிடம் சொன்ன பதிலை சொல்லவே, திரு. ராமசாமிதாஸ் வெளியே வந்து தான் எ. வி. தாமசுக்கு ஒரு கடிதம் எழுதுவதாகவும், அதற்குப் பதில் வரும்வரை தொழிலாளிகள் பொறுத்திருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அவர் கொடுத்த வாக்குறுதியின்பேரில் தொழிலாளிகள் அமைதியாகக் கலைந்துசென்றனர்.

### உலக ஆசிரியர் சங்கத்தின் பத்திரிகை

உலக ஆசிரியர் சங்கத்தின் பத்திரிகையும், லண்டனிலிருந்து இரண்டு மாதங்களுக்கு ஒரு முறை வெளிவருவதுமான டீச்சேர்ஸ் ஆப் தி வொர்ல்ட் (*Teachers of the World*) பத்திரிகை படிப்பது உலகத்திலிருக்கும் எல்லா தேசங்களிலுமுள்ள கல்வி நிலை, ஆசிரியர் இயக்கம் முதலிய விஷயங்களை அறிந்துக்கொள்வதற்கும், மற்ற ராஜ்ய ஆசிரியர் இயக்கத்தின் அனுபவத்தில் நமது சங்கங்களை முன்னேற வைப்பதற்கும் மிகவும் அவசியமாகும். மேற்படி பத்திரிகையின் 3, 4, 5, 6 வெளியீடுகளின் கொஞ்சம் பிரதிகள் இன்னமும் கையில் இருக்கின்ற படியால், தேவையானவர்கள் உடனடி பிரதிக்கு முக்காலணா வீதம் ஸ்டாம்புடன் கீழ்கண்ட விலாசத்திற்கு எழுதி அனுப்பவேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்:

வி. ராமுண்ணி,
தமிழ்நாடு ஆரம்ப ஆசிரியர் சம்மேளனம்
4, அப்பாசாமி பிள்ளை தெரு,
சென்னை-21.

### அ. இ. கிஸான் சபாவின்...

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

வாகக் கமிட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது. இந்துலால் யாக்னிக் தலைவராகவும், கார்யானந்த சர்மாவும், நாகு பாடீலும் உபதலைவர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். என். பிரசாத் ராவ் பொதுக் காரியதரிசியாகவும், ஜக்ஜீத் சிங், டாக்டர் அகம்மது, சர்தேசாய், கோவீமன் முதலியோர் கூட்டுக் காரியதரிசிகளாகவும், பாபா குருமுக் சிங் பொக்கிஷதாரராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மேலும் மத்திய கிசான் கௌன்சிலுக்கு 26 பேர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டனர். தமிழ் நாட்டிலிருந்து பி. ஸ்ரீனிவாசராவும்; மணலி கந்தசாமியும் மத்திய கிசான் கௌன்சிலுக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

# ராதாகிருஷ்ண மில் தொழிலாளர் வெற்றி

பொள்ளாச்சியில் உள்ள எக்ஸ்பெல்லர், லோகட்ரி, டிக்காட்டி கேட்டர், நெல் அல்லர்களில் வேலை செய்யும் தொழிலாளர்கள் தங்களின் ஜீவாதார உரிமைகளைப் பாதுகாக்கும் நிமித்தம் மில் தொழிலாளர் சங்கம் ஆரம்பித்தற்காக வேண்டி ராதாகிருஷ்ண மில் நிர்வாகஸ்தர் 22 தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கி விட்டார்.

20-4-53 லேபர் ஆபீசர் முன் நடந்தவிசாரணையில் 24 தொழிலாளர்களை திருப்பி வேலைக்கு எடுத்துக் கொள்ளுவதெனவும் மாதத்தில் எல்லா தொழிலாளர்களுக்கும் சமமாய் வேலை கிடைக்கும் முறையில் வேலை கொடுப்பதெனவும் மேனேஜ்மெண்டார் சார்பில் ஏ. டி. எஸ். சின்னச்சாமி செட்டியாரும் தொழிலாளர் சார்பில் ஆர். ராமலிங்கமும் கையொப்பமிட்டனர்.

ஆண் தொழிலாளர்களிடம் 17 மணிநேரம் வேலைவாங்குவதில்லையெனவும், பெண் தொழிலாளர்களை இரவு வேலைக்கு வைத்துக் கொள்ளுவதில்லையெனவும், மேனேஜ்மெண்டார் ஒத்துக்கொண்டனர்.

★

### கருங்காலியின் செயல்

மதுரை வீவிங் & டையிங் பாக்டரி ஹவுசைச் சேர்ந்த கருங்காலியான கருப்பையா என்பவன 15-4-53ல் தொழிற்சங்க ஊழியரான தோழர்கள் ஜோஸப, கணபதி இருவரையும ஆயுதம் கொண்டு பலமாகத் தாக்கியுள்ளான். தொழிற்சங்க இயக்கத்தை உடைக்க முதலாளியின் தூண்டுதலினாலேயே இச்செயல்நடந்துள்ளது. இது விஷயமாக 6-4-53லேயே ஜில்லாக் கலெக்டருக்குத் தெரிவித்திருந்தும் அவர் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

★

### நன்கொடை

26-4-53 ஞாயிறன்று திருச்சியில் சௌராஷ்டிர சமூகத்தில், தோழர் பாலாஜியின் மகள் வரலக்ஷ்மிக்கும், கே. பி. துளசிராமனுக்கும் நடைபெற்ற முதல் சீர்திருத்த திருமணத்தில் ஜனசக்தி நிதிக்கு ரூ. 5 நன்கொடையாக கொடுக்கப்பட்டது.

*

# கஞ்சித் தொட்டி உடனே வேண்டும்!

சேலம் ஜில்லா நாமக்கல் தாலூகாவைச் சேர்ந்த சேந்தமங்கலம், பாட்டையம் கவுண்டன புதூர், கோனூர், வடுகப்பட்டி முதலிய பல கிராமங்களைச் சேர்ந்த மக்கள், மாட்டுக்குத் தொட்டியில் கொட்டும் பிழுங்குத் திப்பியை சிறிது கேழ்வரகுடனும், சோளத்துடனுகலந்து சாப்பிடுகிறார்கள். அதனால் வயிற்றுக் கடுப்பு எடுத்துக்கொண்டும், வாந்தி எடுத்துக் கொண்டும், இறுஇறுப்படைந்து மக்கள் மிகவும் கஷ்டப்படுகின்றனர். பண்ணைக்கீரை விதைகளை எடுத்துக் கஞ்சி காய்ச்சி குடிப்பதாலும் மக்கள் அவதிப் படுகின்றனர். மக்களுக்கு வேலையுமில்லை. சோறுமில்லை. பக்கத்தில் 3 மைல் தொலைவிலுள்ள கொல்லி மலையில் விறகுகளைப் பொறுக்கிக் கொண்டுவந்து, கிராமங்களில் சுமை ஒன்று 4 அணுவுக்கும், 5 அணுவிற்கும் சிலர் விற்கின்றனர். அதிலும் பாதிவிலை, சில சிப்பந்திகளுக்கு லஞ்சமாகப் போய்விடுகிறது.

கோனூர் கிராமத்தில் பட்டினி தாங்க முடியாமல் 3 குடும்பங்கள் வெளியேறி விட்டன.

ஆதலால் மேலே சொன்ன கிராமங்களுக்கு சர்க்கார் உடனடியாகக் கஞ்சித் தொட்டிகளைத் திறக்கவேண்டும். இதை சர்க்கார் உடனே கவனிக்குமா?

●

### தச்சநல்லூர் நகரசுத்தியாளர் வேலைநிறுத்தம்

தச்சநல்லூர் பஞ்சாயத்து போர்டு நிர்வாகம் 29-4-53ல் நகரசுத்தித் தொழிலாளி திரு. சி. கருப்பனை அநியாயமாக வேலையை விட்டு நீக்கியதை கண்டித்து மற்ற 11 தொழிலாளிகளும் வேலைநிறுத்தம் செய்துள்ளனர்.

# 10,000 பேர் திரண்ட மே தினக் கூட்டம்

## பாங்கி சிப்பந்திகளும், அணிவகுத்தனர்

*சென்னை நகரின் பல பகுதிகளில், பல்வேறு மக்களிடையே இவ்வருடம் மே தினம் வெகு சிறப்பாகக் கொண்டாடப் பட்டது.*

சென்னை ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையின் கீழ் சுமார் 2,000 பேர் அடங்கிய மே தின ஊர்வலம் நூற்றுக் கணக்கான செங்கொடிகள் பதாகைகள் ஏந்தி ரேப்பியர் பார்க்கிலிருந்து புறப்பட்டது. ஊர்வலத்தில் பல தொழிற்சங்கங்கள் பங்கெடுத்துக்கொண்டன. வீரஞ்செறிந்த டிராம்வே தொழிலாளர்கள் ஊர்வலத்தின் முன்னணியில் தலைமை தாங்கிச் சென்றனர். அன்று மாலை கான்ரான் ஸ்மித் நகர் மைதானத்தில் சுமார் 10,000 பேர் திரண்ட பிரம்மாண்டமான பொதுக் கூட்டம் நடைபெற்றது.

டிராம்வே தொழிற் சங்கத்தின தலைவரான தோழர் விஜயராஜ கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். தோழர்கள் ஜீவானந்தம், மணலி கந்தசாமி முதலியோர் பேசினர்.

சென்னை ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சியின கலைக் குழுவினரால் 'குமுறல்' என்னும் கலா நிகழ்ச்சி நடத்தப்பட்டது. கலா நிகழ்ச்சியைப் பார்க்க சுமார் 15,000 பேர்கள் திரண்டிருந்தார்கள்.

சென்னை நகர தொழிற் சங்க இயக்கத்தில் முதன முறையாக, மத்திய தர வர்க்கத்தைச் சேர்ந்த பாங்கு சிப்பந்திகளும் மே தினத்தைக் கொண்டாடினர். பாங்கு சிப்பந்திகளைப் பாதிக்கும் 'சாஸ்திரி தீர்ப்பை' எதிர்த்து ஒன்றுபட்டுத் தீவிரமாகப் போராடுவதென அவர்கள் மே தினப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டனர். கூட்டம் நடைபெற்ற மெமோரியல் ஹாலுக்கு அவர்கள் ஊர்வலமாகச் சென்றனர்.

தபால் தந்தி தொழிலாளர்கள் யூனியன் சார்பில் சென்னை ஜெனரல் போஸ்டாபீசில் மே தினம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. திரு. பரிபூரணம் தலைமை வகித்தார். சென்னை மேயர் திரு. செங்கல்வராயன், தோழர் மோகன குமாரமங்கலம், திரு. நெடுஞ்செழியன், திரு. ராமநாதன (யு. டி. யு. சி.) முதலியோர் சொற்பொழிவாற்றினர். திரு. லக்ஷுமணன அனைவரையும் வரவேற்றுப் பேசினர்.

### விக்கிரமசிங்கபுரம்

மே தினத்தன்று காலை 10 மணிக்கு விக்கிரமசிங்கபுரத்திலும், சுற்றியுள்ள கிராமங்களிலும் செங்கொடிகள் ஏற்றப்பட்டன. மாலை 4 மணிக்கு வெளவால் கூண்டு மைதானத்திலிருந்து தோழர்கள் மீனாட்சிநாதன், அனந்தகிருஷ்ணன், மாயாண்டிபாரதி முதலியோரின் தலைமையில் ஊர்வலம் புறப்பட்டு நகரின் பல வீதிகளில் சுற்றிப் பின்னர் மீண்டும் மைதானத்தையே அடைந்தது.

மே தினப் பொதுக்கூட்டத்திற்கு தோழர் தளவாய் தலைமைவகித்தார். தோழர்கள் அனந்த கிருஷ்ணன, மாயாண்டி பாரதி, மீனாட்சிநாதன் முதலியோர் பேசினார்கள்.

பின்னர் டாக்டர் பிச்சைக் குட்டியின் சாத்தூர் புதுமைக் கலா கோஷ்டியார் கலா நிகழ்ச்சியை நடத்தினர். இரவு 12 மணிவரை வில்லுப்பாட்டு நடைபெற்றது. கூட்டத்தில 5000 மக்கள் கலந்துகொண்டனர்.

### பாளையூர் பிர்க்கா

தஞ்சை ஜில்லா பாளையூர் பிர்க்கா கம்யூனிஸ்ட் கட்சி. விவசாய சங்க சார்பில், தோழர் பி. வெங்கடேசன் எம். எல். ஏ. தலைமையில் நடைபெற்ற மே தினப் பொதுக்கூட்டத்தில், தோழர்கள் ஏ. சே. சுப்பையா எம்.எல்.ஏ., எம். மீனும்பாள், பி. சிங்காரம், எஸ். காசிநாதன், இளரா முதலியோர் சொற்பொழிவாற்றினர். தோழர் ஏ. நடராஜன் செங்கொடி ஏற்றினர்.

இரவில் தோழர் திருமூர்த்தி கோஷ்டியாரின் 'நாடோடி' என்ற கலா நிகழ்ச்சியும் நடைபெற்றது.

### பரமக்குடி

பரமக்குடியில் மே தினம் விமரிசையாகக் கொண்டாடப் பட்டது. நகரின் முக்கிய இடங்களில் செங்கொடிகள் ஏற்றப் பட்டன. மாலையில் கம்யூனிஸ்டுக்கட்சி காரியாலயத்திலிருந்து மாபெரும் ஊர்வலம் அணிவகுத்துச் சென்றது. இரவில் நடைபெற்ற கூட்டத்திற்கு தோழர் என. பி. குப்புசாமி தலைமை வகித்தார். ராமநாதபுரம் ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சிக் காரியதரிசி தோழர் ஆர். எச். நாதனும், விவசாய சங்கத் தலைவர் தோழர் ஆதிமூலமும் சொற்பொழிவாற்றினர்.

### மதுக்கரை

கோவை சிமெண்டு தொழிலாளர் சங்கத்தின் சார்பாக மே தினம் கொண்டாடப்பட்டது. காலையில் பல இடங்களில் செங்கொடிகள் ஏற்றப் பட்டன. மாலையில் சங்கத்திலிருந்து ஊர்வலம் புறப்பட்டு மதுக்கரை, குரும்பபாளையம் வழியாகச் சென்றது. கூட்டத்திற்கு சங்கத் தலைவர் தோழர் எம். மாரீசன தலைமை வகித்தார். சங்கக் காரியதரிசி தோழர் கே. ஆர். ராமசாமி, தலைவர் பழனியாண்டி எம். எல். ஏ., முதலியோர் சொற்பொழிவாற்றினர்.

### திருவொற்றியூர்

17 தொழிற்சங்க ஸ்தாபனங்களின் சார்பில் திருவொற்றியூர் பஞ்சாயத்து போர்டு தலைவர் எம். ராமானுஜத்தின தலைமையில் மே தினம் கொண்டாடப்பட்டது. தோழர்கள் எஸ். கிருஷ்ணமூர்த்தி (அட்வகேட்), டி. சுபபிரமணி முதலை ராஜமாணிக்கம், கே. முத்தையா முதலியோர் சொற்பொழிவாற்றினர்.

### சோழவந்தான்

தியாகி மணவாளன மைதானத்தில் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நடைபெற்ற மே தினப் பொதுக்கூட்டத்திற்கு தோழர் எஸ். எஸ். சுப்பிரமணி தலைமை வகித்தார். திண்டுக்கல் தோழர் ஏ. பாலசுப்பிரமணியமும், தோழர் காளிமுத்துவும் பேசினார்கள். ஊர்வலமும் நடைபெற்றது.

### அரியலூர்

தோழர் ஏ. ஆர். ஸ்ரீனிவாசன் தலைமையில் நடைபெற்ற மே தினக்கூட்டத்தில் தோழர்கள் ராமய்யா, எஸ். வெங்கடசுப்ரமணியம், மு. அருணசலம் திருச்சி கௌனசிலர் தோழர் ஏ. எஸ். கிருஷ்ணமூர்த்தி முதலியோர் பேசினார்கள்.

---

**சமயநல்லூர்**

# மின்சாரத் தொழிலாளர்களின் அவதி

மின்சாரப் பற்றாக் குறையின் விளைவாக மூன்றிலிரண்டு பகுதி மின்சாரம் வெட்டப்பட்டுள்ளது. இதன் காரணமாக தெருக்களில் பாதிக்குமேற்பட்ட மின்சார விளக்குகள் அணைக்கப்பட்டுவிட்டன. சினிமாக்களிலும் மின்சார விளக்குகள் குறைக்கப்பட்டதோடு மின்சார விசிறிகளும் பெரும்பாலும் நிறுத்தப்பட்டுள்ளன. வீடுகளிலும் ஒரு குறிப்பிட்ட அளவு மின்சாரத்துக்குமேல் உபயோகிக்கக்கூடாதென கட்டளை பிறப்பிக்கப்பட்டுள்ளது. மதுரை நகர மில்களிலும் சிப்ட்கள் நிறுத்தப்பட்டு நூல் உற்பத்தி ஸ்தம்பித்ததுடன் வேலையில்லாத் திண்டாட்டத்துக்கும் பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் இரையாகக் கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

இந்த நிலையில் மதுரைக் கடுத்த சமயநல்லூரில் உள்ள தெர்மல் மின்சார உற்பத்தி நிலையத்தின் நிலைமையென்ன? இங்கு உள்ள 3 பாயிலர்களில் 8000 கிலோவாட் அளவுமின்சாரம் உற்பத்தியாகிறது. மற்றுமிரண்டு பாயிலர்கள் 1953 ஜனவரிக்குள் நிர்மாணிக்கப்பட்டு அதிக மின்சாரம் உற்பத்தி செய்யப் படவேண்டுமென சென்னை சர்க்கார் திட்டம் தீட்டியிருந்த போதிலும்கூட 1953 பிறந்து 4 மாதங்கள் ஆகியும்கூட அவர்களின் திட்டம் ஆமை வேகத்தில்தான நடந்து கொண்டிருக்கிறது. இதுநிறைவேற்றப்பட்டிருந்தால் மேற்கொண்டும் 5000 கிலோவாட் மின்சாரம் உற்பத்தியாகி மதுரை நகருக்கு மிகப்பெரிய உதவியாக இருந்திருக்கும்.

சர்வசதா ஜ்வாலைவிட்டு எரிந்துகொண்டிருக்கும் பாயிலர் அடுப்பின் அருகிலேயே நின்றுகொண்டு வியர்த்துக் கிறுகிறுத்து கருகிக்கொண்டிருக்கின்ற பயர்மேன் குறிப்பிட்ட அளவுக்குமேல் நெருப்பு அதிகமாய் விடாமலும் குறைவாகி விடாமலும் பார்த்துக்கொள்ள வேண்டிய பொறுப்பு பயர்மேனுடையது. இவர் இல்லாமேல தெர்மல் ஸ்டேஷனில் மினசாரமே உற்பத்தி செய்யமுடியாது. இவர் சிறிது கவனக்குறைவாக இருந்துவிட்டால் பாயிலர்களும் நீராவிக் குழாய்களும் வெடித்து மினசாரசபலை நின்றுவிடும். பல லட்சக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள சொத்துக்களுக்கும் அநேக உயிர்களுக்கும் ஆபத்தும் ஏற்படும். இப்படிப்பட்ட கஷ்டமான, ஜீவாதாரமான வேலையைச் செய்துகொண்டிருக்கும் அவருக்கு எந்தவிதமான பாதுகாப்பும் கிடைமாது. அனலைத் தாங்கக்கூடிய கோட்டுகளும், பூட்ஸ்களும், கலர்க் கண்ணாடிகளும் கிடையாது. எந்த நிலையிலும் ஆபத்து ஏற்படக்கூடியவேலையிது என்றாலுங்கூட அவர்களுக்கு "ஆபத்து அலவன்ஸ்" எதுவும் கிடையாது. அவர்களுடைய சம்பளம் 35ம் அலவன்ஸ் 19ம் ஆக மொத்தம் 54 தான்! பயர்மேனுக்கு ஆதரவாயிருக்கும் உதவி பயர்மேன்களுக்கு தினக்கூலி ரூ. $1\frac{1}{4}$ முதல் $1\frac{3}{4}$ வரை பதினைந்து நாட்களுக்கு ஒரு தடவைகூலி போடப்படுகிறது.

நெருப்பில் நிலக்கரி எரிந்து சிட்டமாகிய பிறகு, அந்தசாம்பலைத் தட்டிவிடுகிற தொழிலாளிக்கு கூலி $1\frac{1}{4}$ ரூபாதான், சாம்பல் தூசியிலேயே இவருடைய வாழ்நாள் கழிகிறது. இதனால் க்ஷயம் முதலிய வியாதிகளுக்கு இலக்காகி அகால மரணத்துக்கு ஆளாகவேண்டியிருக்கிறது.

8 மணி நேரம் வரையிலும் நிலக்கரியை வண்டியிலேற்றி முக்கி முக்கித் தள்ளிவரும் கோல் கூலிக்கு $1\frac{1}{4}$ ரூ. தான் கூலி. இவர்களுடைய உடலுழைப்பு கல்லுடைப்பவர்களின் வேலையைபபோல் கடினமானது. மழைக் காலத்தில் மழை கோட் கிடையாது. நனைந்துகொண்டுதான் வேலை செய்யவேண்டும்.

பிட்டர் நிலைமையும், மகாமோசம். காலை 8 மணி முதல் மாலை 5 மணி வரை வேலை செய்யவேண்டும். மீதியுள்ள நேரத்தில் எந்தச்சமயத்திலும் இயந்திரக்கோளாறுகளை செப்பனிட இவர் செல்லவேண்டும். இவர்களுக்கு ஸ்கில்டுக்கு 70 ரூபாயும, அன்ஸ்கில்டுக்கு 50 ரூபாயும், உதவியாளருக்கு 25+19=44-ம் கொடுக்கப்படுகிறது.

ஆரம்ப முதல் கட்டடவேலை செய்து பல வருஷங்கள் சர்வீசும் அனுபவமும் பெற்றவர்களை, கட்டடம், மெஷினரி முதலியவை பூர்த்தியான பினபு வேலையைவிட்டு நீக்கி விடுகிறார்கள். அப்படியே யாரையாவது வேலைக்கு எடுத்துக்கொணடால் ரூ. 1, $1\frac{1}{4}$ ரூ. அற்ப கூலியில் அமர்ததப் படுகிறார்கள்.

எலக்ட்ரிஷியன்கள் எப்பொழுதும் ஓடிக்கொண்டிருக்கும் மின்சார லயன்களைக் கவனித்து வருகிறார்கள். இவர்களுக்கு சம்பளமும் குறைவு. ஆபத்து அலவன்சும் கிடையாது.

பொதுவாக, இங்கு வேலை செய்யும் சுமார் 400 தொழிலாளர்களில், 80 பேருக்குத் தான் வீட்டுவசதி தரப்பட்டிருக்கிறது. அதுவும்கூட 16 பேருக்கு ஓட்டுவீடு 32 தகர வீடு 24 கூரைவீடு, மழை வந்துவிட்டால் அநேக வீடுகளின் நிலைமை வெள்ளக் காடாகிவிடும். ஆபத்தான தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு ஆஸ்பத்திரி வசதி கிடையவே கிடையாது. மின்சாரத் தொழிலாளர்களின் வீடுகளுக்கு மின்சார விளக்கு கிடையாது. மலிவு தானிய ஸ்டோர் கிடையாது.

தொழிலாளர்களுடைய நிலைமை இது. இங்கு 2 மேற்கு ஜெர்மன் நிபுணர்கள் கடந்த 6 மாதங்களாக இருக்கிறார்கள். மேற்கு ஜெர்மனியிலிருந்து வரவழைக்கப்பட்டுள்ள 2 பாயிலர்களை நிர்மாணிக்கும் வரையிலும் இவர்கள் இங்கு இருப்பார்கள். இவர்கள் ஒவ்வொருவருக்கும் மாதம் 2,400 சம்பளமும், 250 ரூ. வீட்டு வாடகை அலவன்ஸும் கொடுக்கப்படுகிறது. போக்குவரத்து, சிற்றுண்டிச் செலவு ஆகியவை அனைத்தும் இலவசம். மாதா மாதம் இந்த இரு நிபுணர்களுக்கு மட்டும் ரூ. 5,500. ஆகிறது. இவர்கள் இன்னும் 18 மாதம் இருப்பார்கள் எனத் தெரிகிறது.

நவசீனாவில், ரஷ்ய நிபுணர்கள் சீன என்ஜினியரின் சம்பளத்தளவே சம்பளமாகப் பெறுகிறார்கள். தங்களுடைய ஒப்பந்தக் காலத்தில் சீனர்களுக்கு தங்களுடைய அனுபவத்தையும் இயந்திர நுணுக்க அறிவையும் கற்றுக் கொடுத்துவிட்டு, வேலை முடிந்ததும் ரஷ்யாவுக்குச் சென்றுவிடுகிறார்கள். ஆனால் அமெரிக்க ஆக்ரமிப்பின கீழ் உள்ள இந்த மே. ஜெர்மன் நிபுணர் தன்னிடம் எந்த இந்தியரையும் அண்ட விடுவதில்லை.

### தொழிலாளர்களின் கோரிக்கைகள்

சென்னை மெமோரியல் ஹாலில் 16-3-53-ல் நடைபெற்ற மாகாண மின்சார ஊழியர் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களின்படி.

1. அன்ஸ்கில்டு தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச அடிப்படைச்சம்பளம் 35-2-55 செமி ஸ்கில்டுகளுக்கு 55-3-85, ஸ்கில்டுகளுக்கு 125-5-150ம் கொடுக்கப்படவேண்டும். விலைவாசிக்குத் தக்க பஞ்சப் படியும் தரவேண்டும். முனனறிவிப்பு இல்லாமல் வேலையை விட்டு நீக்கும் கொடுமை ஒழியவேண்டும்.

இதர கோரிக்கைகளையும் பெற மாகாணம் முழுவதுமுள்ள மின்சாரத் தொழிலாளர்களுடன் சமயநல்லூர் மின்சாரத் தொழிலாளர்களும் ஒன்றுபட்டுள்ளார்கள்.

---

## காரைக்குடி கோவாபரேடிவ் ஸ்டோரில் அக்கிரமம்

### 17 சிப்பந்திகள் வேலையை விட்டு நீக்கப்பட்டனர்!

காரைக்குடி கோவாபரேடிவ் ஸ்டோரில் சில காலமாக பல தில்லுமுல்லுகள் நடந்துவருகிறது. ஸ்டோரில் பொக்கிஷதாராக இருந்த ஒ. எல். எம். மெய்யப்பனை தவறான காரணம் காட்டி வேலையிலிருந்து நீக்கி வைத்திருக்கிறார்கள். அவர் ஸ்டோர் நிர்வாகிகள் மீது தன்னை கட்டாயப்படுத்தி ரூ. 10,000த்துக்கு சத்தியமூர்த்தி ஐயங்கார் பெயருக்கு நோட்டு எழுதி வாங்கி வைத்திருப்பதாகவும் இது தன்னைப் பயமுறுத்தி எழுதி வாங்கப் பட்டதென்றும் போலீசில் ரிப்போர்ட்டு செய்திருக்கிறார். அதோடு கோர்ட்டில் ஸ்டோர் நிர்வாகிகள்மீது வழக்குத் தொடர்ந்து, ஸ்டோர் கணக்குகள் அத்தனையும் பொய் என்றும் தன்னிடம் பல தடவைகளில் கொள்முதலுக்காக ரூ. 15,000 கொடுத்ததாக கையெழுத்து வாங்கிக்கொண்டு தன் பேரில் பத்திதழுதிவிடுவார்கள். ஆனால் கையில் கொடுப்பது ரூ. ஆயிரந்தான். இம்மாதிரி செய்வதற்கு தான உடந்தையாக இருந்ததற்குக் காரணம் உத்தியோகததை காப்பதற்கு என்று சொல்லியுள்ளார். இந்தக் கணக்கு மோசடிகளைத் தெரிந்து கொள்ள ஸ்டோர் கணக்குகள் அனைத்தையும் திடீரென்று தணிக்கை செய்தால் அம்பலமாகிவிடுமென்று ஷை ஒ. எல். எம். மெய்யப்பன தனது ரிப்போர்ட்டில் சொல்லியிருக்கிறார். பல ரிக்கார்டுகளையும் தாக்கல் செய்திருக்கிறார். இவ்வாறு காரைக்குடி ஸ்டோர் நடக்கும் பெரும் ஊழல்களை மோசடிகளை மூடி மறைத்துக் கொண்டே வருகிறார்கள். ஆனால் அவைகள் பொத்துக்கொண்டு வெளிவருகின்றன.

இந்த ஸ்டோர் லட்சக்கணக்காக வியாபாரம் செய்திருக்கிறது. பதினாயிரக்கணக்கான லாபம் கிடைத்திருக்கவேண்டியதற்குப் பதில் நஷ்டக் கணக்கு காட்டுகிறார்களாம்.

30-4-53ம் தேதி ஸ்டோர் சிப்பந்திகள் பிரானமலை, ஆரோக்கியசாமி, பழனியாண்டி உள்பட 17 பேர்களை அநியாயமாக வேலையைவிட்டு விலக்கிவிட்டார்கள்.

இந்த ஸ்டோருக்கு தலைவராக காங்கிரஸ் தலைவர் டாக்டர் சுப்பிரமணியம் இருந்து வருகிறார். இவர் வைத்தது தான சட்டம்! சுருக்கமாகச் சொல்லப்போனால் ஸ்டோரில் இவர் சர்வாதிகாரி!

(ந. கி.)

---

## தோட்டத் தொழிலாளிகளுக்கு போனஸ் உயர்த்த முத்தரப்புக் கூட்டம்

வழக்கமாக தோட்டத் தொழிலாளிகளுக்கு $8\frac{1}{3}$ சதவிகிதம் போனஸ் கொடுதது வந்ததை இவ்வருடம் $6\frac{1}{4}$ ஆக முதலாளிகள் குறைத்துவிட்டதால், தொழிலாளிகள் மத்தியில் ஏற்பட்ட கிளர்ச்சியை கணட சர்க்கார் முத்தரப்பு கூட்டம் ஒன்றிற்கு ஏற்பாடு செய்திருந்தனர். அக்கூட்டம் கூனூரில் 20/4ல் முதலாளிகள் சங்க ஆபீஸில் நடைபெற்றது. லேபர் கமிஷனர் பிரசன்னமாய் இருந்தார். ஏ. ஐ. டி.யு.சி., ஐ. என். டி. யு. சி. சங்க பிரதிகளும பங்கெடுத்தனர். நீண்ட விவாதத்திற்குபிறகு, முதலாளிகளின கணக்குகளை பரிசீலிப்பது என்ற முடிவுடன் கூட்டம் ஒத்திப்போடப்பட்டது.

# சமாதானத்திற்கு என்றுமே தயார்...

(முதற் பக்கத் தொடர்ச்சி)

பிரச்னைகளையும் தீர்க்காமல் ஒதுக்கிவிட முடியாது. எனவே ஒன்றும் வார்த்தைகளைக் குறைத்துக்கொண்டு, செயல்முறையை சற்று அதிகப்படுத்தினால், நிச்சயம் இந்தப் பிரச்னைகளுக்கு ஒரு வழி கண்டுபிடிக்க முடியும்.

ஆயுதக் குறைப்பையும், வறுமையை ஒழிக்க பொருளாதாரப் பிரச்னைகளில் அதிக கவனம் செலுத்தவேண்டிய அவசியத்தையும் ஒன்றாக இணைத்து ஐசனோவர் தன்னுடைய பிரசங்கத்தில் குறிப்பிட்டார். 'உலக உதவிக்காக ஒரு நிதி' திரட்டவேண்டுமென்றும் அவர் கூறினார். 'நிதி' என்று பிரமாதமாகக் கூறிவிட்டால் மட்டும் போதாது.

நிதி உதவி பெறும் தேசங்களின்மீது எத்தகைய அரசியல் நிபந்தனைகளையும் விதிக்க முயற்சிக்காமல், அம்மக்களின் அரசுரிமையை மதித்து நடந்து, பல்வேறு நாடுகளிடையே உண்மையிலேயே விரிவான ஜனநாயக ஒத்துழைப்பின் அடிப்படையில் இந்தப் பிரச்னையை அணுகினால், இதனுடைய பலன முற்றிலும் மாறுபட்டிருக்கும்.

ஆனால் 'உலக நிதிக்காக ஒரு நிதி' திரட்டவேண்டுமென ஐசனோவர் கூறிய தோரணை வேறு விதமான எண்ணத்தைத்தான் உண்டாக்குகிறது. மார்ஷல் திட்டத்தின் மறு பதிப்பாகவும், இதர தேசங்களுக்கும், காலனி நாடுகளுக்கும் 'நிதி'யை வீசி எறிவதன்மூலம் அந்தந்த நாடுகளின் பட்ஜட்டையும், பொருளாதாரங்களையும் தன் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவர முயற்சிக்கும் ட்ரூமனின் நான்கம்ச திட்டத்தின தொடர்ச்சியாகவும்தான் ஐசனோவரின் இந்தப் புதிய யோசனை காட்சியளிக்கிறது.

பர்மாவிலும் இன்னும் சில தேசங்களாலும் அமெரிக்கப் பொருளாதார 'உதவி' நிராகரிக்கப்படும் நிலைமை ஏற்பட்டிருப்பதை நாம் கவனிக்கவேண்டும்.

பல்வேறு நாடுகளுக்கிடையே நடைபெறும் வியாபாரத்திற்கு அமெரிக்கா முட்டுக்கட்டை போட்டுவருவதில் சில தேசங்கள் தம் அதிருப்தியை தெரிவித்துள்ளன. அமெரிக்காவினால் தலைமை தாங்கப்படும் முகாமிலுள்ள தேசங்களில்கூட, குறிப்பாக பிரிட்டனில் அதிருபதி வளருகிறது. ஜனநாயக தேசங்களுடன வியாபாரம் செய்ய விடாமல் அமெரிக்கா தடை விதித்து வருவது கண்டு பிரிட்டனில் எதிர்ப்பு வளர்ந்து வருகிறது.

### டல்லஸின் யுத்தவெறி

ஜனாதிபதி ஐசனோவர் தன்னுடைய பிரசங்கத்தில் சமாதான அபிலாஷைகளை வெளியிட்டார். ஆனால், அமெரிக்காவின் அயல்நாட்டுக் கொள்கைக்கும், இந்த அபிலாஷைகளுக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள தூரம் இருக்கிறது. உதாரணமாக, ஐசனோவர் பிரசங்கம் செய்து இரண்டு நாளைக்குப்பின், அமெரிக்க ராஜாங்க மந்திரி ஜான் பாஸ்டர் டல்லஸ் அந்தப் பிரசங்கத்திற்குக் கொடுத்த வியாக்கியானத்தையே எடுத்துக் கொள்ளலாம். டல்லஸின் பிரசங்கம், ஐசனோவரின் பிரசங்கத்தை ஒரு 'யுத்தச் செய்கையாக' மாற்ற விரும்புகிறது என்று முன்னாள் பிரிட்டிஷ் தொழிற் கட்சி மந்திரியான ஸ்ட்ராச்சி கூறியது குறிப்பிடத் தக்கது.

சீன மக்களால் வெறுத்து, ஒதுக்கி, விரட்டியடிக்கப்பட்ட சியாங்கே ஷேக்கின கும்பல்தான் டல்லஸின் கண்களுக்கு 'தேசிய' சீனாவாகப் புலப்பட்டது. சீன மக்கள் குடியரசை அரசியல், பொருளாதாரத் துறையில் முற்றுகை யிட வேண்டுமென்றும் டல்லஸ் வற்புறுத்தினார்.

டல்லஸின் யுத்த வெறி நெடுநாட்களாக அனைவரும் அறிந்ததே. ஐசனோவரின் பிரசங்கத்தை டல்லஸ் ஒருவேளை சற்று மிகைப்படுத்தி வியாக்கியானம் செய்திருக்கக்கூடும். ஆனால் ஐசனோவர் சர்க்காரின் கொள்கைகளுக்கு முரணாக ராஜாங்க மந்திரியான டல்லஸ் ஒருக்காலும் வியாக்கியானம் செய்திருக்கவே முடியாது.

தகராறுக்கிடமான பிரச்னைகளை சமாதான பூர்வமாகத் தீர்த்துக்கொள்ளலாம் என்று சோவியத் தலைவர்கள் வேண்டுகோள் விடுத்தது அமெரிக்க நிர்ப்பந்தத்தின காரணமாகத்தான் என்று டல்லஸ் குறிப்பிட்டார். ஒரு காட்டின 'கடுமையான' அல்லது 'மிருதுவான' கொள்கைகளுக்குத் தகுந்த பிரகாரம் சோவியத் தலைவர்கள் தங்கள் கொள்கைத்திட்டங்களை நிர்ணயிக்கவில்லை யென்றும், சோவியத் மக்களின் நலன்களையும் சமாதானம், சர்வதேச பந்தோபஸ்தின நலன்களையும் மனதில் கொண்டுதான் அவர்கள் நிர்ணயிக்கின்றனர் என்பதும் உலகறிந்த விஷயம்.

தனது யுத்த வெறியை அடிக்கடி வெளிக்காட்டிக் கொள்ளுவதில் டல்லஸுக்கு அலாதிப் பிரியம். ஆனால், இதனமூலம் எந்தக் காரியத்தையும் சாதிக்கமுடியாது. அமெரிக்காவின் சமாதான ஆலோசனைகளுடன், ஐரோப்பிய பாதுகாப்புக் கூட்டணி, ஐரோப்பியக் கூட்டு ராணுவம் முதலியவற்றை சிருஷ்டித்தல், ஆயுதப் பெருக்கு அதிகரித்தல் முதலிய திட்டங்களையும் ஒன்றாக இணைப்பதின் மூலம், அமெரிக்கக் கொள்கையின் உண்மையான உள்ளக்கிடக்கை எது என்பதை டல்லஸ் தன்னையறியாமலேயேவெளிப்படுத்திவிட்டார்.

### அமெரிக்கக் கொள்கையின் உண்மை சொரூபம்

அமெரிக்க ராஜாங்க மந்திரியின இந்தப் பிரகடனத்திற்குப்பின் அமெரிக்காவின் அயல்நாட்டுக்கொள்கை எது என்று நிர்ணயிப்பது கடினமாகிறது. இதர மக்களின் உரிமைகளை மதித்து நடப்பதன்மூலம் தகராறுன பிரச்னைகளை சமாதான பூர்வமாகத் தீர்த்து, சர்வதேச நெருக்கடியைத் தணிக்க அமெரிக்கா விரும்புகிறதா? அல்லது மீண்டும் தன் ஆயுதப்பெருக்கு கொள்கையையே நீடிக்க விரும்புகிறதா?

சர்வதேச உறவுகளைச் சீர்படுத்துவதற்கு உண்மையிலேயே சமாதானத்தைக் குறிக்கோளாகக் கொண்ட ஆலோசனைகள் அஸ்திவாரமாக அமையும் என்று சோவியத் தலைவர்கள் கருதுகிறார்கள்.

யுத்த பிற்கால விளைவுகளைப் பற்றி ஜனாதிபதி ஐசனோவர் தனனுடைய பிரசங்கத்தில் குறிப்பிட்டார். யுத்தத்திற்குப் பின்னால் உலக நாடுகள் இரண்டு வெவ்வேறான பாதைகளில் பிரிந்து சென்றனவென்றும், ஆங்கிலோ-அமெரிக்க முகாமைச் சேர்ந்த தேசங்கள் சமாதானத்தையும், சர்வதேச பந்தோபஸ்தையும் நிலைநாட்டிப் பாதுகாக்க முயற்சித்தனவென்றும், அதேசமயம் சோவியத் யூனியனும் அதனுடைய நேசநாடுகளும் இதே பாதையைக் கடைப்பிடிக்க விரும்பவில்லையென்றும் ஐசனோவர் குறிப்பிட்டார். யதார்த்த உண்மைகளுக்கு இது முற்றிலும் புறம்பானதாகும். யுத்தத்தால் சீரழிக்கப்பட்ட தன்னுடைய பொருளாதாரத்தை சோவியத் யூனியன் மீண்டும் சீர்படுத்துவதுகூட 'புதிய ஆக்ரமிப்பு அபாயமாக'க் கருதப்பட்டது.

சோவியத் யூனியனைப் பற்றி இவ்வாறு பொய்ப் பிரச்சாரம் செய்வது உலகறிந்த உண்மைகளையே புறக்கணிப்பதாகும். சோவியத் யூனியனின் சமாதான அபிலாஷைகளை இந்த உண்மைகள் தெட்டத் தெளிவாக விளக்குவது மட்டுமின்றி, சமாதானத்தைக் காக்கும் தலைசிறந்த பாதுகாவலனாக சோவியத் யூனியன் பணியாற்றி வந்துள்ளது, இன்னும் வருகிறது என்பதையும் இவை விளக்குகின்றன.

### அமெரிக்க இராணுவச் செலவு

ராணுவ விஷயத்திற்காக அமெரிக்கா செலவழித்து வரும் பிரம்மாண்டமான தொகையையும் ஐசனோவர் குறிப்பிட்டார். வருடா வருடம் இந்தத் தொகை அதிகரித்துவருகிறது. அமெரிக்காவின் தேசியப் பொருளாதாரம், இதற்கு முன் என்றுமே கண்டிராத அளவு ராணுவமயமாகிவருவதை இது நிதர்சனமாக்குகிறது. ராணுவ செலவுகளின் காரணமாக, தாங்கமுடியாத வரிப்பளு மக்கள்மீது சுமத்தப்பட்டுள்ளது. ஆயுதப் பெருக்கு திட்டத்தினால் அமெரிக்காவில் பயமும், பீதியும் நிறைந்த சூழ் நிலைமைதான் நிலவிவருகிறது;

பீரங்கிகள், ராக்கெட் குண்டுகள், வெடி விமானங்கள், போர் விமானங்கள் யுத்தக் கப்பல்கள் முதலியவற்றிற்காக பிரம்மாண்டமான தொகையை அமெரிக்க சர்க்கார் செலவழித்து வருவதாக ஐசனோவர் கூறினார். இன்னும் பிரம்மாண்டமான ராணுவ செலவுகளுக்கு திட்டம் வகுத்துள்ள வட அட்லாண்டிக் ஆக்கிரமிப் பணியைப் புகழ்ந்து பேசுவதற்கு ஐசனோவர் மறந்து போகவில்லை.

யுத்தக் கப்பல்கள், விமானங்கள், பீரங்கிகள், குண்டுகள் முதலியவற்றை உற்பத்தி செய்யாமல் நிறுத்திவிட்டால், எத்தனை டன் உணவு தானியமும், பருத்தியும் சேமிக்க முடியுமென்றும், எத்தனை பள்ளிக்கூடங்கள், ஆஸ்பத்திரிகள் அமைக்க முடியுமென்றும் ஐசனோவர் புள்ளி விவரங்கள் கொடுத்தார்.

அணுகுண்டுகளை உற்பத்தி செய்து குவித்து வைத்திருப்பதன் மூலமாகவும், அமெரிக்காவின் எல்லையிலிருந்து வெகு தூரத்திற்கு அப்பால் நூற்றுக்கணக்கான ராணுவ தளங்களை நிறுவியிருப்பதன் மூலமாகவும் அமெரிக்க மக்களுக்கு எத்தனை கோடி டாலர்கள் வீணாயிற்று என்பதையும் ஐசனோவர் புள்ளி விபரமுடன் விளக்கியிருந்தால் மிகவும் தெளிவாகயிருந்திருக்கும். தன்னுடைய பாதுகாப்பிற்காக அமெரிக்கா தூர தூர தேசங்களில் தளங்களை நிறுவவில்லை. சோவியத் யூனியனமீது தாக்குதல் தொடுப்பதற்கு வசதியான இடங்களில்தான தளங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

### ஆயுதக்குறைப்பு வேண்டும்

யுத்த பிற்கால புனரமைப்பு வேலைகளிலும், தேசிய பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்வதிலும் தன்னுடைய முழு கவனத்தையும் செலுத்தி வந்த சோவியத் யூனியன் ஆயுதப் பெருக்குக் கொள்கையைத் திட்டவட்டமாக நிராகரித்தது. இது மட்டுமின்றி, வல்லரசுகளும் இதர தேசங்களும் ஆயுத உற்பத்தியை கட்டுப்படுத்த வேண்டுமென்றும், படை பலத்தையும், ராணுவ செலவுகளையும் குறைக்கவேண்டுமென்றும் சோவியத் யூனியன் உறுதியாகக் கோரியது. இதே சமயம், அணுகுண்டுகளைத் தடை செய்யவேண்டுமென்றும் சோவியத்யூனியன் கோரியது.

தன்னுடைய சொற்பொழிவில் ஆயுதக் குறைப்புப் பிரச்னையைப் பற்றியும் ஐசனோவர் குறிப்பிட்டிருக்கிறார். இதைப் பற்றி ஐந்து அம்சங்களை அவர் கூறியிருக்கிறார். இந்த அம்சங்களில் கூறியுள்ள ஆலோசனைகளைப்பற்றி சோவியத் யூனியனுக்கு எத்தகைய ஆட்சேபனையும் கிடையாது. ஆனால் இந்த ஆலோசனைகள் பூராவும் மிகவும் பொதுப்படையாகத்தான் இருக்கின்றன.

### ஆதாரமற்ற குற்றச்சாட்டு

அமெரிக்கா எப்பொழுதும் ஆயுதக் குறைப்பு செய்யவே விரும்பியதாகவும், இதற்கு முற்றிலும் மாறான கொள்கையையே சோவியத் யூனியன் கடைப்பிடித்து வந்ததாகவும் கூற ஐசனோவர் முயற்சித்துள்ளார். ஆனால், இந்தக் குற்றச்சாட்டிற்குக் கொஞ்சம்கூட ஆதாரமில்லை. குற்றவாளியின்மீதுள்ள பழியை நிரபராதியின்மீது மாற்றுவதற்குச் செய்யப்படும் முயற்சிதான் இது.

கொரிய யுத்தமும், ஆயுதப் பெருக்கு திட்டமும் லாபகரமான 'தொழில்' என்று சோவியத் யூனியனில் என்றைக்காவது பிரச்சாரம் செய்யப்பட்டுள்ளதா? இதன்மூலம் வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க முடியும் என்று கூறப்பட்டிருக்கிறதா? 'சமாதான பீதி' போன்ற நிலைமையோ அல்லது சர்வதேச நெருக்கடிகள் தணிவதுபோலத் தோன்றினால் பங்கு மார்க்கெட்டில் விலைகள் வீழ்ச்சியடையும் நிலைமையோ சோவியத் யூனியனில் இருக்கிறதா? இவையெல்லாம் நடைபெறுவது அமெரிக்காவில்தான். சோவியத் யூனியனில் அல்ல. ஆயுதப் பெருக்கிற்கும் சோவியத் யூனியனுக்கும் எத்தகைய சம்பந்தமுமில்லை. நிலையான நிரந்தர சமாதானத்திற்காகத்தான் சோவியத் யூனியன் பாடுபடுகிறது. சமாதானத்தைக் கண்டு அது பீதியடையவில்லை.

யுத்தத்திற்குப் பின்னால் சோவியத் யூனியனும் அமெரிக்காவும் வெவ்வேறான பாதைகளில் பிரிந்து சென்றுவிட்டன என்று ஐசனோவர் கூறியது உண்மைதான். ஆனால் அதற்கான காரணங்களை அவர் திரித்துக்கூறியுள்ளார். இரண்டாம் உலகப் போரின்போது சோவியத் யூனியனுக்கு நேசநாடுகளாயிருந்த ஆங்கிலோ அமெரிக்க நாடுகள் யுத்தம் முடிந்த உடனேயே தம் கொள்கையை மாற்றிக் கொண்டன எனும் உண்மையை மறைக்க முடியாது. புறக்கணிக்கவும் முடியாது. யுத்தத்திற்கு முனபு சோவியத் யூனியனபால் அனுஷ்டித்த பகைமையைக் காட்டும் பழைய கொள்கைக்கே இந்நாடுகள் மீண்டும் திரும்பிவிட்டன.

சமாதானத்திற்காகச் செய்யப்படும் ஒவ்வொரு நேர்மையான முயற்சியையும் வரவேற்க தான் தயாராயிருப்பதாக ஐசனோவர் கூறினார். இதற்கு சோவியத் யூனியன் தயாரா? என்றும் கேள்வி கேட்டார்.

### சமாதானத்திற்கு என்றுமே தயார்

எல்லா முக்கியமான சர்வதேசப் பிரச்னைகளையும் சுமுகமாகப் பேசித் தீர்த்துக்கொள்ளுவதற்கு சோவியத் யூனியன் என்றுமே தயாரிருந்து வருவது அனைவருக்கும் தெரிந்ததே. ஆனால், ஐசனோவர் தனனுடைய சொற்பொழிவில் குறிப்பிட்ட சமாதான ஆலோசனைகளுடன் சில நிபந்தனைகளையும் சோவியத் யூனியனுக்கு விதித்துள்ளார்.

ஒரு பக்கம் சமாதான அபிலாஷைகளையும், மறு பக்கம் அதற்கான நிபந்தனைகளையும் அமெரிக்க ஜனாதிபதி வெளியிட்டிருப்பது கண்டு சர்வதேச அபிப்பிராயம் ஒருமுகமாய் கண்டித்துள்ளது. அதிகாரப் பாங்கான நிபந்தனைகளுடன் கூடிய சமாதான ஆலோசனைகளை சோவியத் யூனியன் ஆயினும்சரி, அல்லது அமெரிக்கா, பிரிட்டன, வேறு எந்த தேசமானாலும் சரி, கலந்து விவாதிக்க ஒருக்காலும் ஒப்புக்கொள்ளாது என்று லண்டன் டைம்ஸ் பத்திரிகையே நியாயமாகக் குறிப்பிட்டுள்ளது.

சர்வதேசப் பிரச்னைகளை சமாதானபூர்வமாகத் தீர்க்க வேண்டும் என்ற நோக்குடன் சோவியத் தலைவர்கள் விடும் எந்த வேண்டுகோளுடனும்; இதுவரை எத்தகைய நிபந்தனைகளையும் அவர்கள் இணைத்துக் கூறியதில்லை. ஆங்கிலோ-அமெரிக்க நாடுகள்மீது முனகூட்டியே எத்தகைய அதிகாரப் பாங்கான கண்டிப்புகளும் விதித்ததில்லை. ஆங்கிலோ அமெரிக்க நாடுகளிடம் நியாயமாக பாத்தியதை கொண்டாட எத்தனையோ பிரச்னைகள் இருந்தபோதிலும் சோவியத் யூனியன் அவற்றை சமாதான ஆலோசனைகளுடன் ஒன்றாக இணைக்கவில்லை.

சிக்கல் நிறைந்த தகராறான பிரச்னைகளை சுமுகமாகத் தீர்த்துக்கொள்ள அமெரிக்க சர்க்காரோ அல்லது வேறு எந்த சர்க்காரோ ஆலோசனை கூறினாலும் சோவியத் தலைவர்கள் அதை மனப்பூர்வமாக வரவேற்கிறார்கள். நேரடியான பேச்சு வார்த்தைகளின் மூலமாகவோ அல்லது ஐ. நா. ஸ்தாபன அமைப்பிற்குள்ளேயோ தகராறான பிரச்னைகள் அனைத்தையும் தெளிவாக மனம் விட்டுப் பேசித் தீர்த்துக்கொள்ள சோவியத் தரப்பு என்றுமே தயார் என்பதையே இது காட்டுகிறது.

'சர்வதேசப் பிரச்னையைத் தீர்த்து வைப்பதில் தன்னுடைய நியாயமான பாத்திரத்தை வகிக்க அமெரிக்கா தயார்' என்று ஐசனோவர் கூறினார். ஆனால் இந்தப் பிரகடனத்தை ஆதரிக்கும் முறையில் அவருடைய சொற்பொழிவில் வேறு எந்த அம்சமும் இல்லை.

ஆனால், சோவியத் யூனியனைப் பொறுத்தவரையில் சர்வதேசப் பிரச்னைகளைத் தீர்த்து வைப்பதில் தன்னுடைய நியாயமான பாத்திரத்தை வகிக்க அது தயாராயிருக்கிறது. இதில் எத்தகைய சந்தேகத்திற்கும் இடமில்லை. பல முக்கியமான சர்வதேசப் பிரச்னைகளில், சோவியத் யூனியன பன்முறை இதை நிரூபித்துக் காட்டியுள்ளது.

இதுதான் இன்றுள்ள சர்வதேச நிலைமை.

சோவியத் யூனியன் கடைப்பிடிக்கும் கொள்கை சமாதானம் விரும்பும் இதர தேசங்களின் நலன்களுக்கு எதிரும்புதிருமாக இருக்க முடியாது. எத்தகைய சமூக அமைப்பைப் பெற்றிருந்தபோதிலும், சர்வதேச ஒத்துழைப்பை அபிவிருத்தி செய்வதற்காகப் பாடுபடும் எல்லா தேசங்களின் முயற்சிகளையும் சோவியத் யூனியன் போற்றுகிறது. உலக சமாதானத்தை உறுதிப்படுத்துவதற்காக சோவியத் மக்கள் முயன்றுவரும் மனப்பூர்வமான நடவடிக்கைகளின பிரதிபிம்பமாகத்தான சோவியத் யூனியனின் இந்தக் கொள்கை அமைந்திருக்கிறது.

ஏப்ரல் 25-ம் தேதியன்று சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் பத்திரிகையின் பிராவ்தாவில் வெளியாகியுள்ள கட்டுரையின் தமிழ்ச்சுருக்கம்—

# கோவை மில் தொழிலாளர் போராட்டம்

மின்சார வெட்டினால் பாதிக்கப்பட்டு பட்டினியிலும், கடன் தொல்லையிலும் அவதிப்பட்ட கோவை மில் தொழிலாளிகளுக்கு நஷ்டஈடு கொடுக்கப்பட வேண்டும் என்ற பலமான கிளர்ச்சி வளர்ந்தது. சட்ட சபையில் தோழர் ராமமூர்த்தி இது சம்பந்தமாக தொழில் மந்திரிக்கு நல்ல சாட்டை கொடுத்தார். வேறு வழியின்றி 4-4-'53ல் சென்னை கோட்டையில் தொழிலாளிகள்—முதலாளிகள் பிரதிநிதிகளின மகாநாட்டை தொழில்மந்திரி கூட்டினார்: முதன்மந்திரி ராஜாஜியும் பங்கெடுத்தார். அந்த மகாநாட்டிலேயே முதலாளிகள் ஒரு காசும் நஷ்டஈடாகத் தர முடியாதென்றும், இன்று செய்து வருவதற்குமேல் வேறொன்றும் செய்வதற்கில்லை என்றும் பிடிவாதமாக மறுத்துவிட்டார்கள். பேச்சு வார்த்தை முறிந்ததற்கு ஒப்பான ஒரு நிலைமைதானது! இருந்தபோதிலும், மறுபடியும் இது விஷயமாக ஒருதரம் சந்தித்துப் பேசி ஏதாவது பரிகாரம் காணமுடியுமா என்று பார்ப்பதற்காக தொழில்மந்திரி அவர்களின் யோசனையின் பேரில் ஒரு கமிட்டி நிறுவியது. தொழிலாளர் பிரதிநிதிகளாக ராமமூர்த்தி, சின்னதுரை, ராமானுஜம், பழனியாண்டி, M.L A.யும், மில் முதலாளிகள் சங்கத் தலைவர்கள் உள்பட முதலாளிகள் பிரதிநிதிகளும் கொண்ட கமிட்டியது.

### முதலாளிகளின் உடும்புப் பிடி

17-4-53 தேதியன்று அக்கமிட்டி கோவை ஜில்லா கலெக்டர் காரியாலயத்தில் கலெக்டர் தலைமையில் கூடியது. இந்தத் தடவையும் முதலாளிகளின் பிடிவாதத்தில் மாற்றமில்லை, மில் முதலாளிகள் சங்கத் தலைவர், எவ்வித நஷ்டஈடும் கொடுக்கமுடியாதென்றும், தொழிலாளிகளுக்கு வேலை செய்யும் நாட்களின் கூலி உள்பட ரூ. 35 குறைந்த பட்சம் கொடுத்து வருவதற்குமேல் ஒன்றும் கொடுக்க இயலாது என்று கூறிவிட்டார். தங்களுக்கும் மின்சார வெட்டினால் கஷ்டம் ஏற்பட்டுள்ளதென்றும், மின்சாரத்தை ஒழுங்காக சப்ளை செய்வதாக சர்க்கார் கூறி தாங்கள் மில் நடத்திவருவதாயும் சர்க்கார் அதன்படி நடக்காமல் நீண்ட நாட்கள் மின்சார வெட்டு கொண்டுவந்து விட்டதால், தாங்கள் நஷ்டப்படவேண்டியதுடன் சுமார் 50 லட்சம் ரூபாய் செலவு செய்து ஜெனரேட்டர்கள் வைத்து மின்சார உற்பத்தி செய்வதாயும், அந்த மின்சாரம் ஒரு யூனிட்டுக்கு $4\frac{1}{2}$ அணாவுக்கு [illegible] ஆகிறதென்றும், சர்க்கார் மின்சாரத்துக்கு எவ்வளவு [illegible] குறைந்த கட்டணம்தான் [illegible]கொடுத்து வந்ததாயும், இன்னும் சர்க்கார் தர்மல் ஸ்டேஷனை வைத்து மின்சார சப்ளை செய்தால் யூனிட் 3 அணாதான் ஆகுமென்றும் கூறி—ஆகவே இப்போது அவர்களுக்கு ஏற்பட்டுள்ள அதிகச் செலவுக்கு சர்க்கார் நஷ்டஈடு முதலாளிகளுக்கு கொடுக்க வேண்டுமென்று கோரி வழக்குத் தொடர சட்டங்களில் வழியுண்டா என்று பரிசிலித்து வருவதாயும் கூறினார்கள்.

### முதலாளிக்கு ஒரு நியாயம் தொழிலாளிக்கு மற்றொன்று

சர்க்கார் மின்சாரத்தை நம்பி யிருக்கும் முதலாளிகளுக்கு, மின்சார சப்ளை சரிவர கொடுக்கப்படாவிடில் சர்க்கார் நஷ்டஈடு கொடுக்கவேண்டும் என்று முதலாளிகள் கோரும்போது; அதே நியாயத்தை தொழிலாளிகள் விஷயத்தில் ஏன் முதலாளிகள் கையாள மறுக்கிறார்கள்? மில்லை நம்பி யிருக்கும் தொழிலாளிகளுக்கு முதலாளிகள் வேலை கொடுக்காவிட்டால் நியாயமான நஷ்டஈடு முதலாளிகள் கொடுக்கத்தானே வேண்டும்? என்று ராமமூர்த்தி கூறினார். அதற்கு பதிலில்லை. முதலாளிகளுக்கு மட்டும் நஷ்டஈடு தொழிலாளிகளுக்கு பட்டினி! இதுதான் முதலாளிகள் நியாயம்!

நஷ்டஈடு தர மறுக்கவே, தொழிலாளர் பிரதிநிதிகள் எல்லோருக்கும் சேர்ந்து, பஞ்சாலை முக்கூட்டுக் கமிட்டி தனது சிபார்சில் வேலையில்லாத நாட்களுக்கு என்ன நஷ்டஈடு கொடுக்கக் கூறியுள்ளதோ அதையாவது ஏற்றுக்கொண்டு—அத்தீர்ப்பு வெளிவந்ததும்—அதன்படி முதலாளிகள் நஷ்ட ஈடு கொடுக்கட்டும், அதுவரை உடனடியாக தலைக்கு ரூ. 100 அட்வான்ஸாக சகல தொழிலாளிகளுக்கும் கொடுக்கட்டும் என்று யோசனை வைத்தார்கள். முதலாளிகள் அதையும் மறுத்ததோடல்லாமல் பஞ்சாலை முக்கூட்டுக் கமிட்டியின சிபார்சுகளைத் தாங்கள் ஏற்கப்போவதில்லை என்றும் அப்பொழுதே கூறிவிட்டார்கள். பல்லாயிரக் கணக்கில் பணம் செலவழித்து இரண்டு வருட காலம் வேலைசெய்த பஞ்சாலை முக்கூட்டுக் கமிட்டி செய்துள்ள சிபார்சின் தலைவிதியும் தெளிவாகி விட்டது. முதலாளிகளின் தைரியம் தான் என்ன!

எல்லா யோசனைகளும் முதலாளிகளால் மறுக்கப்படவே, இப்பிரச்னையை இருசாராரும் ஒப்புக்கொள்ளும் மத்தியஸ்தர்களின் முடிவுக்குவிடலாமென்று தொழிலாளர் பிரதிநிதிகள் கூறினார்கள். அதையும் ஏற்க மறுத்து பேச்சு வார்த்தைகளைப் பயனற்றதாக்கி, முறித்தெறிந்தார்கள் முதலாளிகள். கோவை ஜில்லாவில் 35,000 தொழிலாளிகளின் வாழ்க்கையை பட்டினிப் படுகுழியில் தள்ள அவர்களுக்கு கொஞ்சமும் கவலையில்லை. இந்த தைரியம் முதலாளிகளுக்கு எப்படி வந்தது? ஒன்று காங்கிரஸ் சர்க்காருக்கு இது விஷயத்தில் எந்தக்கொள்கையுமில்லை. மகாநாடுகளைக் கூட்டுவதும், கலைப்பதும்தான் அவர்கள் கண்டுள்ள மார்க்கம். பட்டினி கிடக்கும் மில் தொழிலாளிகள் நஷ்டஈடு கேட்பது சரியானதுதான். அதற்காக நிவாரணம் கொடுத்தாகவேண்டுமென்று சர்க்கார் கூறத்தயாராயில்லை. ஆகவே மில் முதலாளிகள் தைரியமாயிருக்கிறார்கள். இரண்டாவதாக, தொழிலாளிகளிடையில் ஒற்றுமையில்லை. கோவையில் நான்கு சங்கங்களில் தொழிலாளிகள் பிரிந்து கிடக்கிறார்கள். ஆகவே, ஒன்றுபட்டுப் போராடமாட்டார்கள். இதுதான் முதலாளிகளின் தைரியத்திற்குக் காரணம்.

### இறுதிவரை போராடுவார்கள்

ஆனால் போராட்ட பரம்பரையில் வளர்ந்த கோவைத் தொழிலாளிகள் — அவர்கள் எந்தத் தலைமையின் கீழிருந்தாலும் சரி—இதை விடப்போவதில்லை. சோஷலிஸ்டுத் தலைமையில் உள்ள ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம், ஐ.என்.டி.யு.சி. தலைமையில் உள்ள சங்கம் இரண்டும் வேலைநிறுத்தத்துக்கு நோட்டீஸ் கொடுத்துள்ளது! செங்கொடியின் கீழுள்ள கோவை மில் தொழிலாளர் சங்கமும் ஸ்டிரைக உள்பட எந்த நேரடி நடவடிக்கை உசிதமென்று படுகிறதோ எந்த சமயத்திலும் எடுக்கப்படும் என்று தீர்மானித்து சர்க்காருக்கும் முதலாளிகளுக்கும் தெரிவித்துள்ளது. இதிலிருந்து, கோவை தொழிலாளி வர்க்கம் தன வாழ்க்கையை பாதுகாக்க போர்க்களத்திலிறங்கத் தயார் என்று பிரகடனப்படுத்தியுள்ளதைக் காணலாம். அந்தப் போராட்டம் வெற்றிபெற ஒற்றுமை அவசியம். அந்த ஒற்றுமையைக் கட்ட முன்வரும்படி கோரி பஞ்சாலைத் தொழிலாளர் சங்கக் காரியதரிசி ஸ்ரீ சின்னதுரையவர்களுக்கு தோழர் ராமமூர்த்தியும், கோவை மில் தொழிலாளர் சங்கமும் கடிதங்கள் எழுதியுள்ளன. போராட்டத்துக்கான தயாரிப்புகளும், கிளர்ச்சியும் தொடர்ந்துநடக்கிறது. சென்ற காலத்தில் லட்சக்கணக்கில் அல்ல, கோடிக்கணக்கில் கொள்ளை லாபம் சம்பாதித்த மில் முதலாளிகள், இந்த நெருக்கடியில் தொழிலாளிகளுக்கு நஷ்டஈடு தராவிடில், அது கிடைக்கும்வரை, சாப்பாடு கிடைக்கும் வரை கோவை தொழிலாளிகள் சகல கஷ்டங்களையும் அனுபவித்து போராடப்போகிறார்கள்!

—கே. ரமனி

### தோழர் மணியம்மாள் மறைவு

தஞ்சை ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சியின் முக்கியமான ஊழியர்களில் ஒருவரும், விவசாய சங்க வேலைகளில் முன்னணியில் நின்று பணியாற்றியவரும், நீண்ட நாள் தேசபக்தருமான தோழர் கே. மணியம்மாள் ஏப்ரல் 25ம் தேதியன்று திருவாரூர் ஆஸ்பத்திரியில் அகால மரணமடைந்து விட்டார்கள். மறுநாள் நடந்த பிரேத ஊர்வலத்தில் தொழிலாளர்களும் விவசாயிகளும், திராவிட கழகம், திராவிட முன்னேற்றக் கழகம் முதலிய பல்வேறு அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்களும் ஏராளமாகக் கலந்துகொண்டு, தம் இறுதி வணக்கத்தைச் செலுத்தினர்.

தோழர் மணியம்மாளின் சேவையைப் பாராட்டி மயானத்தில், தோழர் காத்தமுத்து, தோழர் யாகூப் (தி.க) முதலியோர் சொற்பொழிவாற்றினர்.

தோழர் மணியம்மாளின் ஞாபகார்த்தமாக செங்கொடியைத் தாழ்த்துகிறோம்.

## பத்திரிகை உலகத்தில்

# ஏகாதிபத்திய-பெரு முதலாளி பிடிப்பு

ஆரம்ப முதற்கொண்டே நம் தேசிய இயக்கமானது பத்திரிகை சுதந்திரத்திற்காகப் போராடி வந்திருக்கிறது. நம் தேசத் தலைவர்கள், பத்திரிகைகளின்மூலம் நம் மக்களை எழுச்சியடையச் செய்ததுமன்றி பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் ஒவ்வொரு வாய்ப்பூட்டுச் சட்டத்தையும் எதிர்த்துப் போரிட்டு வந்தார்கள்.

அரசாங்கத்தின் ஆணவத்திற்கு அடிபணிவதைவிட பர்சிய மொழியில் தாம் நடத்தும் பத்திரிகையான 'மிரத்—உல்—அக்பார்' என்ற பத்திரிகையை நிறுத்திவிடுவதே மேல் என்று கருதினார் ராம்மோஹன்ராய். 1878ம்வருடத்திய தேசிய பாஷையிலுள்ள பத்திரிகைகளின் சட்டத்தை நடைமுறையில் தோற்கடிப்பதற்காக அம்ரித பஜார் பத்திரிகையானது ஒரே நாளில் வங்காள மொழியிலிருந்து ஆங்கிலமொழியில்செய்திகளை பிரசுரிக்க ஆரம்பித்தது.

சுரேந்திரநாத் பானர்ஜி, அரவிந்த கோஷ், பாலகங்காதர திலக், சித்தரஞ்சன் தாஸ்; மகாத்மா காந்தி இவர்கள் இன்னும் பலரைப்போல், சுதந்திர போராட்டத்தில் கூரிய ஆயுதமாகவும், பிரிட்டிஷ்காரர்களின் அசுர அடக்குமுறைப் பத்திரிகைச் சட்டங்களுக்கு எதிராக இடைவிடா போராட்டத்தின் பலம்பொருந்திய ஆயுதமாகவும், நம் தேச பத்திரிகைகளை உபயோகித்தார்கள்.

ஆனால் இப்பொழுதுள்ள நம் தேசிய பத்திரிகைகள் தங்களின் வீரப் பரம்பரையை உதறித் தள்ளிவிட்டன. 1930-ம் ஆண்டு சிட்டகாங் ஆயுதக் கிடங்கு சூரையாடிய வழக்குகளைப் போற்றிப் புகழ்ந்த பத்திரிகைகள் 1946ம் ஆண்டு கடற்படை வீரர்களின் எழுச்சியை இகழ்ந்து கூறலாயின. தன முன்னோடிகளால் பின்பற்றப்பட்ட வீரம் செறிந்த பாரம்பரியப் பாதையில் செல்லாமல் இப்போதுள்ள காங்கிரஸ் சர்க்காரானது நம் பத்திரிகைகளை நசுக்கி அவைகளின் குரல்வளையை நெறிக்கப் பார்க்கிறது.

ஜாலியன்வாலா பாக்கில் நடந்த படுகொலையைக் கண்டித்து பேசியதற்காக 'இங்கிலிஷ்மேன்' என்ற பத்திரிகை தாகூரை தூஷித்தது.

திலகரை எதிர்த்து பிரச்சாரம் செய்ததால் 'ஸ்டேட்ஸ்மேன்' என்ற பத்திரிகையின் பெயர் சந்திசிரிக்க ஆரம்பித்தது. 1930ம் வருட முதற்கொண்டு வங்காள புரட்சி வீரர்களின் இரத்தத்தைக் குடிக்க வெறிபிடித்து அலைந்தது. ஆனால் அதே ஸ்டேட்ஸ்மான், 1940 முதற்கொண்டு "வீணர்களின் பகுதி" என்ற தலைப்பின்கீழ் தொடர்ச்சியாக காங்கிரஸ் தலைவர்களைப்பற்றி துஷ்பிரசாரம் செய்துவந்தது. நம் தேச சுதந்திரப் போராட்டத்தை அடியோடு நசுக்கிவிடவேண்டுமென்று அப்பத்திரிகை இடைவிடாமல் அலறியது.

இந்த கடந்தகால நடவடிக்கைகளுக்காக இப்பொழுதுகூட பிரிட்டிஷ்காரர்களுக்குச் சொந்தமான பத்திரிகைகள் காங்கிரஸ் ஆட்சியின்கீழ் அல்லலுறவில்லை.

ஒரு பத்திரிகை நிலைத்து நிற்பதில் விளம்பரங்களுக்குப் பெரும்பங்கு உண்டு. இந்த விஷயத்தில் அரசாங்கமானது தன் கொள்கையை ஆதரிக்கும் பத்திரிகைகளுக்கும், தன் குறைபாடுகளை எடுத்துச் சொல்லும் பத்திரிகைகளுக்கும் அக்கிரமமாக தாரதம்மியம் காட்டி வருகிறது.

சமீபத்தில், பம்பாய் அரசாங்கத்தைக் குற்றஞ்சாட்டி சில தலையங்கம் எழுதியதற்காக, மொரார்ஜி அரசாங்கம் டைம்ஸ் ஆப் இந்தியா பத்திரிகைக்கு விளம்பரங்களைக் கொடுக்க மறுத்துவிட்டது.

இதே குற்றத்திற்காக வங்காள அரசாங்கமானது, 30 ஆயிரம் பிரதிகள் விற்கும் 'பாசுமதி' என்ற தினசரிக்கு விளம்பரம் கொடுக்க மறுத்துவிட்டு 1,000 பிரதிகள் கூட விற்பனையாகாத ஸ்தல காங்கிரஸ் கந்தையான 'ஜனசேவக்' என்ற பத்திரிகைக்கு தாராளமாக விளம்பரங்களைக் கொடுத்துவருகிறது.

இந்த தாரதம்மியம் கம்யூனிஸ்ட் தினசரி பத்திரிகைகளின் விஷயத்தில் தெட்டத்தெளிவாகத் தெரிகிறது. அவைகளின் பிரதிகளின் எண்ணிக்கை அதிகமாக இருப்பதோடு கூட நல்ல செல்வாக்கும் இருக்கிறது. அப்படியிருந்தும் அரசாங்கத்திடமிருந்து அவைகளுக்கு விளம்பரங்களே கிடைப்பது இல்லை.

அகில இந்திய வானொலிக்கும், வெளிநாட்டு விவகார இலாக்காவிற்கும் பி. டி. ஐ. செய்து வரும் தொண்டிற்காக மத்திய அரசாங்கம் அதற்கு மாதாமாதம் 22,000 ரூபாய்கள் கொடுத்து வருகிறது. அதே நேரத்தில் அதிக விற்பனையாகும் பத்திரிகைகளிடமிருந்து ரூ. 4,000க்கு மேல் இதற்குக் கிடைப்பது கஷ்டமாயிருக்கிறது. மாகாண அரசாங்கங்கள்கூட இந்த பத்திரிகை ஏஜென்சிகளுக்கு நிறைய பண உதவி செய்து வருகின்றன.

இந்த விதமாக அரசாங்கமானது சுயேச்சையான பத்திரிக்கைகள் வெளிவருதில் உதவி செய்வதற்குபதில், இந்த நாட்டில் கைப்பாவை போன்ற அடிமை பத்திரிகைகள் வெளிவருவதற்கு ஆதரவு தருகிறது. 70 சதவிகித பத்திரிகைச் செய்திகள், அரசாங்க வட்டாரங்களில் மந்திரிகளிடமிருந்தும், அதிகாரிகளிடமிருந்தும். செய்தித் துணிக்குகள் ரூபத்திலோ அல்லது; அறிக்கைகள் ரூபத்திலோ வெளிவருகிறது. ஆதாரத்தை வெளிப்படுத்தக்கூடாதுஎன்றுவிசேஷசெய்தி வெளியீடுகள் பிரசுரிக்கப்படுகின்றன.

தவிர அரசாங்கத்திற்கு விரோதமான செய்திகளை போடக்கூடாது என்ற அதிகார வட்டாரங்களைச் சேர்ந்த நிர்ப்பந்தமும் இருக்கிறது. அதனால்தான், மக்கள் சபையில், கம்யூனிஸ்ட் எதிர்ப்பின் பேச்சுகள் மிகச் சொற்ப அளவில்தான் செய்தித் தாட்களில் வெளிவருகின்றன.

நம் பத்திரிகைகளின்மேல் அந்நிய ஏகாதிபத்தியத்துக்குள்ள பிடியானது அவைகளின் சுதந்திரத்திற்கே ஒரு அபாய விளக்காக நிற்கிறது.

நம் நாட்டிலிருக்கும் மூன்று முக்கிய பத்திரிகை ஏஜென்சிகள் சர்வ தேச செய்திகளைக் கொடுப்பதில், ஏகாதிபத்திய ஆதரிப்பு ஏஜென்சிகளையே நம்பவேண்டியிருக்கிறது. பி. டி. ஐ; யு. பி. ஐ., டைம்ஸ் ஆப் இந்தியா முறையே ராய்ட்டர், ப்ரான்ஸ்பிரஸ், யு. பி. ஏ. என்ற ஏஜென்சிகளோடு பிணைக்கப்பட்டிருக்கின்றன.

யுனைடெட் ஸ்டேட்ஸ் நம் பத்திரிகைகளை தன் கைப்பாவைகளாக எங்கு மாற்றிவிடப் போகிறதோ என்ற திகில் நாளுக்கு நாள் வலுத்து வருகிறது. அரசாங்க அலுவலகத்தின் கணக்குப்படி, யுனைடெட் ஸ்டேட்ஸின் செய்தித் ஸ்தாபனமானது, 1951ம் ஆண்டு முதல் பாதியில் 3,69,498 டாலர்களை இந்தியாவில் செலவிட்டிருக்கிறது.

சமீபத்தில் டெல்லியிலுள்ள பத்திரிகை ஆசிரியர் ஒருவர், யு.எஸ்.ஸி.ன் அன்னிய நாட்டு அலுவலகம் டெல்லியிலுள்ள இரு உருது பத்திரிகைகளுக்கு மாதத்தொகையாக செலுத்தி வருகிறது என்று குற்றம் சாட்டியிருக்கிறார். அந்த யு. எஸ். அதிகாரி அதை மறுத்தும் கூட, ஆசிரியர் குற்றத்தை ருசுப்பிக்கமுடியும் என்று சொல்கிறார்.

அம்ருத பஜார் பத்திரிகை தான் இன்று கூட சைனாவை பற்றி அமெரிக்கா செய்யும் தூஷணையை பிரசுரித்து வருகிறது. யூசிஸ் கொண்டுவரும்

(2-ம் பக்கம் பார்க்க)

Edited, Printed & Published by G. ALAVANDAR, at Janasakti Press, Subodhaya Buildings, 38, Mount Road, Madras - 6.
OFFICE : 3, Anthony Street, Madras - 14.

Regd. No. M. 5934